11. "திருச்சிராப்பள்ளி டாக்டர் ஜி. சிற்றம்பலம், திருமதி. அம்சவள்ளி அறக்கட்டளையினர்" நடத்திய நூல் போட்டியில் "மறந்துபோன மருத்துவம்" பரிசு பெற்றதைப் பாராட்டி, "மகத்துவ மருத்துவர்" என்னும் சிறப்புப்பட்டம் அளித்து சிறப்பிக்கப்பட்டமை.

12. கோவை வசந்த வாசல் கவி மன்றம் நடத்திய கவிதைப் போட்டியில், பரிசுப் பெற்றமைக்காகவும், மேற்கொண்டு வரும், மருத்துவத் தொண்டிற்காகவும், "அகத்தியர் நினைவு விருது" அளித்து சிறப்பிக்கப்பட்டமை.

13. திருவையாறு ஔவை அறக்கட்டளை சார்பில் கோவா கொங்கனி தமிழ்க் கவிஞர்களின் சங்கமம் நடத்திய கவியரங்கத்தில் பரிசு பெற்றமைக்காக "கவிமாமணி விருது" அளித்து சிறப்பு செய்தமை.

14. அகில இந்திய சித்த மருத்துவர்கள் சங்கம் நடத்திய மாநாட்டில், தமிழ் மருத்துவ சேவையைப் பாராட்டி "புலிப்பாணி சித்தர் விருது" அளித்து சிறப்பு செய்தது.

15. சென்னை தமிழகக் கவிஞர் கலை இலக்கியச் சங்கம், அன்னாரின் தமிழ்த் தொண்டினையும், கவி இயற்றும் ஆற்றலையும் பாராட்டி, "நற்கவிஞர்" பட்டம் அளித்தும் சிறப்பித்தது.

16. திருவரங்கம் செண்பகத்தமிழ் அரங்கு, "அருள் மனச் சான்றோர் விருது" அளித்துப் பாராட்டியது.

17. தஞ்சாவூர் அகத்தியர் மூலிகை உடல் இயக்க மருத்துவ மையம், பாராட்டி அளித்த "தமிழ்நாடு சித்தர்கள் மருத்துவநாத விருது 2013".

18. சின்னாளப்பட்டி அனைத்துலகத் தமிழ்மாமன்றம் வழங்கிய "சித்த மருத்துவச் செம்மல் விருது".

19. மும்பை சங்கமம், "மருத்துவ விண்மீன் (STAR AWARD) பட்டம்" அளித்துப் பாராட்டியது.

20. சென்னை பாதை நலச்சங்கமமும் ஜீவனாலயா நலச்சங்கமமும் இணைந்து, தன்னலமற்ற சேவையைப் பாராட்டி, அளிக்கப்பட்ட விருதுகள்.

21. நாம் தமிழர் கட்சியின் அரியலூர் மாவட்டக்கிளை விருது அளித்துப் பாராட்டியது.

# வெண்மை புரட்சி விளைவித்த வேதனைகள்





மருத்துவர் அரியூர் காசி பிச்சை

# வெண்மைப் புரட்சி
# விளைவித்த வேதனைகள்




மருத்துவர் **காசி பிச்சை**

தலைவர், இயற்கை வாழ்வியல் இயக்கம்

**திருமானூர், அரியலூர் மாவட்டம் - 621 715**

# நூற்குறிப்பு


| | | |
|---|---|---|
| நூல் தலைப்பு | : | வெண்மைப் புரட்சி விளைவித்த வேதனைகள் |
| முதல்பதிப்பு | : | (திசம்பர் 2005) |
| இரண்டாம் பதிப்பு | : | ஆகஸ்ட் 2008 |
| மூன்றாம் பதிப்பு | : | ஏப்ரல் 2012 |
| நான்காம் பதிப்பு | : | ஜுன் 2014 |
| ஆசிரியர் | : | மருத்துவர் காசி பிச்சை பி.வி.எஸ்சி., |
| தாள் வகை | : | 16 கி.கி. வெண்தாள் |
| பக்கம் | : | 67 |
| விலை | : | உருவா 40/- |
| ஒளி அச்சு | : | அஸ்வான் பிரிண்டர்ஸ்,<br>நெ.6, மிஷின் தெரு, புள்ளம்பாடி.<br>போன் : 04329 - 241420 |
| நூல் கிடைக்குமிடம் | : | வெண்ணிலா பதிப்பகம்<br>"மனிதம் இல்லம்"<br>3/218, இராமசாமி நகர்,<br>திருமானூர்,<br>அரியலூர் மாவட்டம் - 621 715. |




# நன்றிப் படையல்


இந்நூலின் கருப்பொருளை மையமாக வைத்து எழுதப்பட்ட கட்டுரைகளை அவ்வப்போது மக்கள் கவனத்திற்கு எடுத்துச் சென்று பெருந்தொண்டு புரிந்த தமிழக விவசாயி உலகம், தினமணி, புதிய கோடங்கி, நிலவளம், கவிதாசரண், சிந்தனையாளன் இதழ்களுக்கும், பிறரைப் படித்துக் கொண்டிருப்பதிலேயே காலங்கடத்தாமல், என்னைப் பிறர் படிக்க வேண்டும் என்று தூண்டிக்கொண்டிருந்த பெரியார் தமிழ்ப் பேரவை நிறுவனர் மறைந்த தோழர் **சங்கமித்ரா** அவர்கட்கும், தமிழின வாழ்வியல் இயக்கத்தின் தலைவனாக என்னை சிறிது காலம் வைத்திருந்த, இயற்கை வாழ்வியல், நோயற்ற வாழ்வுக்கான குறிக்கோளை என்னுள் விதைத்த வேளாண் பெரியார் மறைந்த கோ. நம்மாழ்வார் அவர்கட்கும் மன நிறைவான நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.



சுடரொளிக் கவிஞர் மருத்துவர்
**காசிபிச்சை** பி.வி.எஸ்சி.,
3/218, இராமசாமி நகர்,
திருமானூர்,
அரியலூர் மாவட்டம் – 621 715.

# என்னுள்





# மதிப்புரை

## படிப்பாளிகள் அளித்த பட்டயங்கள்

1. திரு. சண்முகானந்தன் சபரி கெமிக்கல்ஸ், 8, பாளையக்காரத்தெரு, போரூர், சென்னை – 116.
ஜெர்சி மாடுகள் 60க்கு மேல் மாதவரம் பால் பண்ணையில் 5 லட்சம் பேர் வேலை வாய்ப்புத் திட்டத்தின் கீழ் வளர்த்துப் பார்த்து வாழ்க்கையை முழுவதுமாக இழந்தவர்களில் எனது அண்ணனும் ஒருவர். "எல்லாமே அன்னியம்" என்கிற தங்கள் கருத்து வெகுவாகக் கவர்ந்தது மட்டுமின்றி, எதார்த்தமாகவும் இருந்தது. நம் கையில் இருக்கும் "நாட்டு ரகங்களை" போற்றி பராமரித்து செலவினங்கள் குறைத்து சிறப்புறுவோம் என்கிற ஆணித்தரமான வார்த்தைகள் உண்மையிலேயே நீண்ட கால வளர்ச்சிக்கு வித்திடுவதாக அமைகிறது. மருத்துவர் அவர்களின் சீரிய பணிக்கு வாழ்த்துக்கள்.

2. திரு. அ. குணசேகர் எம்.எஸ்சி.,எம்.எட்., 1/13, கோப்பு, திருச்சி.
வெண்மைப்புரட்சி தொழிற்புரட்சி என்கிற பெயர்களில் அரசு நமது பாரம்பரிய விவசாய முறைகளை அழித்து விவசாயிகளை காலம் முழுவதும் கடன்காரர்களாக மாற்றி, தொழில் அதிபர்களை மேலும் தொழிலதிபர்களாக மாற்றுவதே அரசின் மறைமுகக் கொள்கையாக இருக்கிறது. அரசே திட்டமிட்டு கால்நடையை அழித்து, விவசாயிகளை இயந்திரம் உரம், பூச்சி மருந்துகட்கு அடிமையாக்கி நிரந்தர கடன்காரர்களாக மாற்றிவிட்டது.

தமிழர்கள் பிறப்பு முதல் இறப்பு வரை மேற்கொண்ட பழக்க வழக்கங்களின் மூலம் பொது மரம். பொது மேய்ச்சல் நிலம், எவ்வாறு உண்டாக்கினர் என்பதனையும், அவைகள் எவ்வாறு தற்போது வெறும் சடங்காக மாறியது என்பதனையும் தெளிவாக்கியுள்ளார். அடுத்த தலை முறையிலாவது ஆசிரியர் கனவுகாணும், இயற்கை விவசாயம், பாரம்பரிய கால்நடைகள் வளர்ப்பு ஆகியன சாத்தியம் ஆகும் என்று நம்புவோம்.

3. திரு. கீ. தேவதாஸ் காந்தி தமிழ்நாடு இயற்கை மருத்துவ சங்கம், காந்தி நினைவு நிதி, மதுரை – 20.

புரட்சிகரமான ஆழமான சிந்தனைக்குரிய கருத்துக்கள்; மக்கள் நலமோடு வாழ வேண்டும்; உண்மைகள் உணரப்பட வேண்டும்; ஆராய்ச்சியாளர்கள் ஆய்வு மாணவர்களுக்கு நல்ல களமாக விளங்க நோக்கம் கொண்ட நூல். மீண்டும் மீண்டும் படிக்க வேண்டிய நூல்.

4. திரு. சந்திரசேகரன் ஆசிரியர், நந்தவனம், திருச்சி–3.
நமது இயற்கையோடு தொடர்பு கொண்ட வாழ்க்கையை கொஞ்சம் கொஞ்சமாக தொலைத்து வருகிறோம் என்ற உண்மையை மிகத் துல்லியமான ஆதாரங்களுடன் விளக்கி இருக்கிறார். வளர்ந்து வரும் தலைமுறைக்கு நிறைய ஆபத்துக்களை விளைவித்து வருகிறோம் என்பதை நினைக்கும் போது பயமாகவும் இருக்கிறது. சிந்தனை என்பது சுத்தமாக மழுங்கடிக்கப்பட்ட நிலையில் இது குறித்த விழிப்புணர்வு மக்களிடம் வர வேண்டுமே! இந்த நூல் அனைத்து தரப்பு மக்களிடமும் அவசியம் சென்றடைய வேண்டும். அதற்கான நடவடிக்கைகளை என் போன்ற பத்திரிக்கையாளர்கள் முன் எடுத்துச் செல்ல வேண்டும்.

5. திரு. க. இரா. முத்துசாமி இயற்கை வாழ்வகம், திருப்பூர்.
பால் நஞ்சாகிவிட்ட செய்தியோடு, சூரிய ஒளியை பயன்படுத்தும் முறையும், தமிழ் காளையின் (காங்கேயம்) சிறப்பும், மூலியாகிப் போன பசுவின் குறைபாடுகளையும் சான்றுகளோடு சிறப்பாகத் தொகுத்துள்ளீர்கள். தமிழர்களின் வாழ்வியல் சிறப்பு, குறள் காட்டும் தூய சிந்தனைகள் 2037 ஆண்டுகளுக்கு முன் எழுதப்பட்ட திருக்குறளை காப்பாற்றிக் கொடுத்த பனைமரம் பற்றியும் அடுத்த பதிப்பில் சேர்த்துக் கொள்ள வேண்டுகிறோம்.

6. பாவலர் எழு ஞாயிறு சேலம் – 7.
பலர் அறியாத, நினைக்காத ஒரு மறுபக்கத்தை தெளிவு படுத்துவதே இந்நூலின் உள்ளடக்கம். மாந்தருக்கு பசுக்கள் பால் கொடுப்பதாக எண்ணியதே இயற்கைக்கு மாறானது என பலர் எண்ணவும் முடியாத அடித்தளத்தில் 14 தலைப்புகளில் கட்டுரைகள் விரிகின்றன. கால்நடைகள், விவசாய நிலம், விவசாயத் தொழிலாளர்கள், முன்னாள் பெருமை, இந்நாள் அடிமை எல்லாமே மிக இயல்பாக, எளிமையாகச் சொல்லப்பட்ட இந்நூல் ஒரு புது முயற்சி ! அருமை !!



7. யாதும் ஊரே, திங்களிதழ், சென்னை.
இந்நூலில் பால் பசுக்களின் கலப்பினத்திட்ட முறைகள், அதன் வெற்றி தோல்விகள், அவற்றின் இழப்புகள் ஆகியன ஆசிரியரால் நன்று விளக்கப்பட்டுள்ளன. எந்த ஒரு பொருளையும் அது சார்ந்துள்ள இயற்கை நிலையினை உணர்ந்து வாழவிட வேண்டும். அந்த நிலைக்கு மாறுபட்டால் அழிவே நிச்சயம் என்பதை ஆசிரியர் ஆணித்தரமாக பதிவு செய்துள்ளார். இந்நூலைப் படித்து முடிக்கையில் வெண்மைப் புரட்சிக்குள் இத்தனை வேதனைகளா என்று நம்மை வேதனைப்பட வைக்கிறது. பூமிக்குள் உறங்கிக் கிடக்கும் சக்தியை மனித குலத்திற்குக் கிடைக்கச் செய்யும் கால்நடைகளைப் போற்றிப் பாதுகாப்பது நமது கடமை என்பதை உணர்வோம்.

8. மறையர் வழி, திங்களிதழ், சென்னை.
இந்தியத் துணைக்கண்ட அரசியலாளர்கள், தலையில் வைத்துக் கொண்டாடிய வெண்மைப் புரட்சியின் வெற்றிக்குப் பின்னால் இருக்கும், வேதனைகள் என்ன என்பதை ஆசிரியர் தெளிவாக்கும் அழகே தனி.

பால்வளத்தை அதிகரிப்பதும், வெளிநாட்டு பசுக்களின் எண்ணிக்கை, நலம் ஆகியவற்றை பாதுகாப்பதும், வெண்மைப் புரட்சியின் நோக்கம். புரட்சியைத் தொடங்கி நடத்தி வெற்றியும் அடைந்து விட்டதாக ஆள்வோர்கள் கூறிக் கொள்ளும் இன்றைய சூழலில், ஏற்கனவே இங்கு இருந்த நமது மண்ணின் சாதி மாடுகளின் எண்ணிக்கை, பாதுகாக்கப் பட்டதா? அப்பசுக்களின் பாலளவு வளப்படுத்தப் பட்டதா? என்றால் பதிலில்லை..... இல்லை தான்.

பாலருந்தும் மோகத்தை அதிகரித்து, மறைமுகமாக காளைகளை சாகடித்து விட்டது வெண்மைப்புரட்சி. அப்படியானால் காளைகள் செய்து வந்த உழவு வேலைகள், இனிமேல் உழுவைகள் (Tractor) செய்யும்; காளைகளின் உயிர் வாழும் உணவான வைக்கோல் கூழங்களை, இயந்திரம் கொண்டு அறுப்பதன் மூலம் பட்டினி போட்டு, சாகடிப்பது வெண்மைப்புரட்சி. மேலும், சிந்தி, ஜெர்சி, தார்ப்பார்க்கர் என்ற அயலக பசுக்களைக் கொண்டு வந்து நிறைத்தால் இங்குள்ள நாட்டு சாதி பசுக்கள், அடிமாடாக, கும்பல் கும்பலாக கேரளத்திற்கு கொண்டு போகப் படுகிறது.

வேளாண் வேலைகளுக்கு காளைகள்; நல்ல விளைச்சலுக்குத் தொழு உரம், தொழு உரத்தால் மண்ணில் நுண்ணுயிர்கள் பெருக்கம். கூடவே மண் புழுக்களின் பெருக்கமும், உதவியும். இதனால் குறைந்த அளவே தண்ணீர் தேவை... என தற்சார்பு கொண்ட தனித்தன்மைகளால் வளமான விளை பொருளும், சத்து நிறைந்த உணவும் கிடைத்தது. இது பசுமைப் புரட்சிக்கு முன்.

எங்கு தற்சார்பும் தனித்தன்மையும் சாகடிக்கப்படுகிறதோ, அங்கு எதிர் விளைவுள்ள வீழ்ச்சி மட்டுமே இருக்க முடியும்.

அதிகப் பால் உற்பத்தி, அதிக வருவாய், கடன் வசதி, மானியம் தள்ளுபடி என்று ஆசை காட்டி, உழு குடிகளையும், உழுசார் குடிகளையும் கடன் சுமையில் உழல விட்டு வறுமையிலேயே வைத்து, உல்லாச வாசிகளுக்கு, உழைத்துக் கொட்ட வைத்தது தான் வெண்மைப் புரட்சியின் சாதனைகள். பால் அருந்துவதால் விளையும் கேடுகளை தெளிவித்து, மாட்டின் பால் மனிதனுக்கான இயற்கை உணவே அல்ல என நிறுவுவது இன்னும் சிறப்பு.

9. சட்டப்பார்வை, சனவரி, 2007

பசு பால் கொடுப்பது தன் கன்றுக்காக. அதில் பங்குபோட மனிதனுக்கு என்ன உரிமை உள்ளது என்று கேட்கிறார். ஒரு கட்டத்தில், பாலை மருந்தாக மட்டும் அருந்தினால் தான், மாட்டினம் நீடித்து இருக்கும் என்றும் எச்சரிக்கை விடுக்கிறார். எப்போது அதிக பால் வேண்டும் என்று மனிதன் ஆசைப்பட்டானோ, அப்போதே, அதிக பால் உற்பத்திக்கான கலப்புத் தீவனமும், இன்னபிறவும் கொடுக்கத் தொடங்கி, இயற்கை வாழ்வியலுக்கான கால்நடை வளர்ப்பே வணிகமயமாக்கலாக மாற்றப்பட்டு விட்டது என்கிறார். காளைகளை காயடிக்கும் வழக்கத்தை கடுமையாக விமர்சிக்கிறார். இதனால் என்ன ஆகும்? செயற்கையான முறையில் பசுக்கள் கருத்தரிக்கப் படுகின்றன. இதனால் கர்ப்பப்பை கோளாறு. பல உயரின பசுக்கள் அடிமாட்டு விலைக்கு சந்தையில் விற்கப்படுகின்றன. மாடுகள் அழிவை நோக்கி சென்று கொண்டிருக்கின்றன. மாடுகளின் இடத்தில் இரண்டு டிராக்டர் கொண்டு உழவு செய்யப்படுகிறது. அதனால் நிலம் கெட்டிப்பட்டு, கற்றோட்டம் இல்லாத, கான்கிரீட் தளமாக மாறி



விடுகிறது. மண்புழுக்கள் இறந்து விடும். இயற்கையான தொழு உரம் கிடைப்பதில்லை. இரசாயன உரத்தை பயன்படுத்த வேண்டிய நிலை. இரசாயன உரம் இட்டால், அங்கு தண்ணீர் அதிகமாகப் பாய்ச்ச வேண்டும். இதனால் நிலத்தடி நீருக்காகப் போராட்டம். அதை உறிஞ்சி எடுக்க எந்திர சாதனங்கள். இப்படி எல்லாம் எந்திரமயமாகி விவசாயிகள் என்ன தொழில் செய்தாலும் அடிமட்ட வாழ்வில் இருந்து மீள முடியா அவல நிலை. இங்கிருக்கும் பசுக்களை சரியாக வாழ வைக்கமால், குளிர்மிக்க அயல்நாட்டில் இருந்து இறக்குமதி செய்யப்படும் பசுக்களுக்கு இயற்கையிலேயே, பாலுணர்வு குறைவாக இருக்கும் என்றும், இதனால் மாடுகள் பெருக்கமும் தடைபடுகிறது என்று வருத்தப்படுகிறார் ஆசிரியர்.

மாடு இல்லாமல் மனிதன் இல்லை என்றும், வீட்டிற்கு ஒரு மாடு வளர்க்க வேண்டும் என்றும், வெண்மைப்புரட்சி என்பது வெறும் கவர்ச்சியே என்றும், ஆசிரியர் வேதனையுடன் முடிக்கிறார். இயற்கையை மீறிச் சென்றால் விளைவு தீர்வில்லா பேரழிவுதான் என்று ஆசிரியர் உணர்த்துகின்றார். எதிர்கால சந்ததியினரை எச்சரிக்கும் இதனை அனைவரும் அவசியம் வாங்கி வாசிக்க வேண்டும். இப்புத்தகம் பரிசிற்கும் பாராட்டுக்கும் உரியது.

# 1. திருத்தப்பட வேண்டிய தவறுகள்

பால், வெண்பன்றி இறைச்சி, கோழிமுட்டை உற்பத்திகள் அடங்கியது வெண்மைப்புரட்சி. நம் நாடு பற்றாக்குறையில் இருக்கிறது. மக்கள் பற்றாக்குறை நோய் கொண்டவர்களாக இருக்கிறார்கள். ஏழ்மை, எட்டிபிடித்த பிடியை விட்டு விடாமல் இருக்கிறது. வறுமை வாட்டி எடுத்துக் கொண்டிருக்கிறது. நம் சராசரி ஆயுட்காலம் பாதாளத்தில் கிடக்கிறது. குழந்தைச் சாவுகள் கூடிக்கொண்டே இருக்கிறது. சே! என்று நொந்து கொண்ட அறிவியலாளர்கள் காட்டிய வழிதான் வெண்மைப்புரட்சி.

சராசரியாக மனிதன் உட்கொள்ளும் பால் 80 மில்லியைக் கூடத் தாண்டவில்லை. ஒரு மனிதன் ஆண்டொன்றுக்கு உட்கொள்ளும் இறைச்சி அளவு ஒரு கிலோவைக் கூட எட்டவில்லை. வெண்பன்றி இறைச்சியோ தீண்டாமைக்குள் தள்ளப்பட்டுத் திணறிக் கொண்டிருக்கிறது. புரட்சி வேகத்தில் மக்கள் உண்மை நிலையையும் தேவையையும் புரிந்து கொள்ள வேண்டும், செயல்பட வைக்க வேண்டும் என்ற நோக்கத்தில் தொடங்கப்பட்டது வெண்மைப் புரட்சி.

உலக அரங்கில் கால்நடைகளின் எண்ணிக்கையில் முதல் இடத்தில் நின்றாலும், பெறப்படும் சராசரி பால் அளவு மிக மிகக் குறைந்த அளவே உள்ளதால், பால் உற்பத்தியை தலையாய நோக்கமாகக் கொண்டு திட்டங்கள் வகுக்கப்பட்டன. பசுக்களின் எண்ணிக்கை குறைய வேண்டும். அதன் பால் உற்பத்தி பெருக வேண்டும் என்பதான நோக்கம் வரையறுக்கப்பட்டது. அதாவது அப்போதைய நிலையில் நம் நாட்டுப் பசுக்கள் சராசரி 2 லிட்டர் அளவே பால் கொடுத்து வந்ததை 20 லிட்டர் பால் கொடுக்கும் திறன் படைத்ததாக மாற்றும் வல்லமை அறிவியலுக்கு உண்டு என்பதாகக் கவர்ச்சி காட்டப்பட்டது.

அறிவியலாளர்கள் இயற்கையின் இரகசியம் ஒன்றை நன்றாகப் புரிந்து கொள்ள வேண்டும். அறிவியல் வளர்ச்சியைப் பயன் படுத்துவதோடு நிறுத்தியிருக்க வேண்டும். அளவுக்கு மேல் மிகும் செயற்கைப் போக்கினை, செயல்பாட்டினை இயற்கை ஏற்றுக் கொள்ளாமல், சீற்றம் கொண்டு சீறிப் பாய்ந்து, புயலாகவும் சூறாவளியாகவும் ஆழிப்பேரலையாகவும் மனிதனுக்கு



எச்சரிக்கை கொடுக்கும் – கொடுத்துக் கொண்டு வருகிறது – என்பதை அறிவியல் மனிதன் பொருட்படுத்தத் தவறிவிட்டான். இயற்கையின் போக்கினை உதாசீனப் படுத்தி விட்டான். மரபு வழி பாரம்பரியத் தன்மையின் தொன்மையைக் கருத்தில் கொள்ளவே முற்படவில்லை.

மின் சக்தியைப் பல்வேறு முறைகளில் பயன்படுத்தக் கற்றுக் கொண்ட பிறகு பிறந்த அறிவியலாளர்கள், மின் சக்திக்கு முன்னைய உலகம் ஆயிரக்கணக்கான இலட்சக்கணக்கான ஆண்டுகளாகப் படிப்படியே மெல்ல மெல்ல இயற்கையோடு இயைந்து வளர்ந்த வளர்ச்சியை ஒரே மூச்சில் புரட்டிப்போட்டு விடுவதே அறிவியல் முன்னேற்றம், அறிவியல் வாழ்வு என்பதாக மோகம் கொண்டு, இயற்கைக்கு மாறாக வாழத் தலைப்பட்டதன் கோளாறின் வெளிப்பாடு தான், இன்றைய இயற்கைக்கும் செயற்கைக்குமான போராட்டமாகக் காணக் கிடைக்கிறது.

இன்றைய அறிவியலாளர்கள் இயற்கை வளர்ந்த வளர்ச்சியினைக் கற்றறிந்த பிறகு, அதனை மாற்றும் அறிவியல் கண்டுபிடிப்பிற்குள் நுழைய அனுமதித்திருக்க வேண்டும். தவறு செய்து விட்டோம். எது சரி, எது தவறு என்று ஆராய்ந்து அறிவதற்கு முன்னதாகவே அவசரப்பட்டு நல்லவனவற்றையும் பழையவனவாகக் கழித்துத் தூக்கி எறிந்து விட்டோம். தவறு! மிகப் பெரிய தவறு.

இங்கே வெண்மைப் புரட்சியின் வெண்பன்றி இறைச்சி உற்பத்தி பற்றியோ, தேவை பற்றியோ திட்டத்தின் வெற்றி தோல்வி பற்றியோ விவாதிக்கப் போவதில்லை.

காரணம் வெண்பன்றி அபரிதமாக உற்பத்தி செய்யப்பட்டு விட்டது என்று பெருமை கூறிக்கொள்ளவோ, மக்கள் வெண்பன்றி இறைச்சியை ஏற்றுக்கொள்ளக் கற்றுக் கொடுத்து விட்டதாகப் பீற்றிக் கொள்வதோ, இந்த உற்பத்தியால் உள்நாட்டுப் பன்றிகள் பாதிக்கப்பட்டு விட்டதாக சிணுங்கிக் கொள்ளவோ, அல்லது பல்வேறு நோய்கள் பரவி நம் நாட்டுப் பன்றிகள் பாதிக்கப்பட்டு விட்டன என்று புலம்பித் தவிக்கவோ, இந்த இறைச்சியால் புதுப்புது நோய்கள் பரவி, மக்கள் தீர்க்க முடியாத நோய்களுக்கு ஆட்பட்டு விட்டார்கள் என்று கண்ணீர் வடிப்பதோ, நோக்கம் அல்ல.

அதே போல, பாமரர்களுக்கும் எட்டும்படியான, முட்டை உற்பத்தி பெருக்கப்பட்டு மக்களின் அன்றாடத் தேவைகளில் முட்டை உணவு பங்கெடுக்கச் செய்து விட்ட வெற்றி பற்றியோ, குறைந்த விலையில் கோழி இறைச்சி கிடைக்கும் வாய்ப்புகள் வளர்ந்து விட்டதைப் பற்றியோ, கோழிப்பண்ணைகள், இறைச்சி உற்பத்தித் தொழிலாக வளர்ந்து பெருகி, நம் கிராமத்துக் குழந்தைகளுக்கு அவசிய உணவாக அரசாங்கமே முட்டைகள் வழங்கும் நிலைக்கும், அயல்நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யும் அளவிற்கு, வெண்மைப் புரட்சி விளைவித்த நற்பயன் என்று விளக்கம் கொடுப்பதோ நம் நோக்கமல்ல. அயல் இனக்கோழிகள் கோடிக்கணக்கில் உற்பத்தி செய்தாலும், நம் நாட்டு கோழிகளுக்குரிய மதிப்பை, பயன்பாட்டை மாற்றிட முடியவில்லை என்பதோடு, கிராம அளவில் நாட்டுக் கோழிகளை அழித்து விட்டு அந்த இடத்தை அயல் இனக் கோழிகள் பிடித்திட முடியவில்லை என்பது உண்மையாக இருப்பதால், "முட்டை உற்பத்தி வெண்மைப்புரட்சி" பற்றி இங்கே நாம் விவாதப் பொருளாக எடுத்துக் கொள்ளப் போவதில்லை.

பால் பெருக்கத்திற்கான வழிமுறைகள், பால் பசுக்களின் கலப்பினத் திட்ட முறைகள், கால்நடைப் பராமரிப்புக்கான இலக்கு, அதன் வெற்றி தோல்விகள், அவை கொடுத்த ஈடு செய்ய முடியாத இழப்புகள் பற்றி மட்டும் இங்கே விவாதப் பொருளாக எடுத்துக் கொள்கிறோம்.

இது பசுமைப் புரட்சியைப் பார்த்து போட்டுக் கொண்ட சூடு; எப்படியோ தவறு செய்தாயிற்று; தவறுகள் திருத்தப்பட வேண்டும் ! திருந்தித் தப்பிப்பது எப்படி?



## 2. பசு வளர்ப்பு பாலுக்காக அல்ல

மாடு என்றால் பக்கம் என்று பொருள், சுமைக்கும், தூக்கும் தலைக்கும் பக்கத்தில் இடையில் இருப்பதால் தான் சும்மாடு என்று பெயர். காலுக்குப் பக்கத்தில் தலைக்குப் பக்கத்தில் என்று சுட்டிக்காட்டத்தான் கால் மாடு, தலைமாடு. ஆக பக்கத்தில் வைத்து அக்கரையோடு பராமரிக்க வேண்டிய உயிரினம் கால்நடைகள் என்று பொருள். பகைமையை, பகைவர்களை பக்கத்தில் வைத்துப் பராமரிக்கப் போவதில்லை அல்லவா! மனிதனின் வாழ்வியலோடு பிண்ணிப் பிணைந்து இரண்டறக் கலந்து, பக்கத்தில் வைத்துப் பராமரிக்கப் பட்டதால்தான், தொழுது வணங்கிப் பாதுகாக்கப்பட வேண்டிய அளவிற்குக் கருதப்பட்டதால் தான், கால்நடைகள் கட்டப்பட்ட இடம் தொழுவம் என்று பெயர் பெற்றது. அதிலிருந்து அவிழ்த்து விடப்பட்ட பொலி மாடுகள், தொழுவத்து மாடுகளாயின. மனித வாழ்க்கைக்கு மாடுகள் அவசியம் என்பதைவிட மாடுகள் இல்லையேல், மனித வாழ்க்கையே இல்லை என்பதை உணர வேண்டும். மனிதன் இல்லையேல் மாடுகள் வாழும். ஆனால், மாடுகள் இல்லாமல் மனிதனால் வாழ முடியாது. கால்நடை பராமரிப்பு என்பதே, கால்நடைகளை வளர்ப்பதற்காக ஏற்பட்டதல்ல; மனிதர்களை வாழ வைப்பதற்காக. இந்த எதார்த்தத்தைப் புரிந்தவர்கள் நம் முன்னோர்கள். ஆகவே தான் மாடு என்றால் செல்வம் என்று கருதிக் கொண்டாடினார்கள்.

போர் தொடுக்கும் முன்னதாக போர் அறிவிப்பு செய்வதற்கே ஆநிரை கவர்தலைத்தானே போர் அறிவிப்பு முறையாகக் கொண்டிருக்கிறார்கள்! கால்நடைகளைக் கவர்ந்து சென்று பொருளாதார வீழ்ச்சி ஏற்படுத்தினார்கள்.

அத்துணை ஏன்? விவசாயப் பெருங்குடிகள் நிலக்கிழார்கள் என்பவர்கள் தன்னிடம் சொந்த ஏர் இத்தனை இருக்கின்றன என்று கூறிக் கொள்வதிலேயே பெருமைப்பட்டுக் கொண்டது நம் கண்முன்னால் நடைபெற்ற நிகழ்ச்சி தானே! சொந்தமாக "ஒற்றை ஏர் கூட இல்லாதவன் வாழ வக்கற்றவன்" என்பதான பழமொழி இதைத் தானே கூறுகிறது! பட்டிப் பட்டியாகக் கால்நடைகள் வைத்து இருந்தவர்கள் தானே பாராட்டப் பட்டிருக்கிறார்கள்! இன்று நிலைமை தலைகீழ் மாற்றம். மாடே இல்லாத பங்களாவாசிகள் சமுதாய நிலையில் உயர்ந்த இடமாகக் கருதப்பட்டு, மாடு வைத்திருப்பவர்கள் மட்டமானவர்களாக பார்க்கப்படுகிறார்கள்.

ஓர் உண்மையை தெரிந்து கொள்ள வேண்டும். கால்நடைகள் வளர்த்தது நம் பாரம்பரிய முறைப்படி உழவுத் தொழிலுக்காகத்தான். அது தரும் இயற்கையான தொழு உரத்திற்காகத் தானேயன்றி, அது கொடுக்கம் பாலுக்காக அல்லவே அல்ல.

உல பாலூட்டிகள் அனைத்துமே, தத்தமது குட்டுகளுக்காகத் தான் தாய்ப்பால் சுரக்கிறதேயன்றி, மற்ற உயிர்களை பாதுகாக்க அல்ல. மனிதனுக்காக பசுக்கள் பால் கொடுப்பதாக எண்ணியதே இயற்கைக்கு மாறானது. அதிலும் ***"தவழும் வரை தாய்ப்பால்"*** என்ற பழமொழிக்கேற்ப, பல் முளைத்தபிறகு, குழந்தைகளுக்குத் திட உணவு கொடுத்து மாற்றிட வேண்டுமேயன்றி, சாகும் வரை பால் குடிப்பது என்பதே இயற்கைக்கு மாறானது.

அந்தக் காலத்தில் தாய் இல்லாத, அல்லது தாய்ப்பால் கிடைக்க முடியாத பிஞ்சுக் குழந்தைகளுக்கும், திட உணவை செரிக்க முடியாத வயோதிக நிலை எய்தியவர்களுக்கும் மாற்று உணாக பசும்பால் கொடுக்கப்பட்டு வந்ததை, எப்போதும், எல்லோருக்கும் அடிப்படை கட்டாயமாக பாவித்து, பசுக்களே பால் கொடுப்பதற்காகத்தான் என்று எடுத்துக் கொண்டது நேர்மையானதே அல்ல.

பசு பால் கொடுப்பது தன் கன்றுகளுக்காக. அந்தக் கன்றுகளைப் பட்டினி போட இந்த மனிதனுக்கு என்ன உரிமை இருக்கிறது? கன்றுகளுக்கு தன் எடையில் பத்தில் ஒரு பங்கு (1/10) தாய்ப்பால் கொடுக்கப்பட வேண்டும். பிறந்த பசுங்கன்று இருபது கிலோ எடை கொண்டது. அதற்குத் தேவையானது ஒரு நாளைக்கு 2 லிட்டர் பால், இந்த அளவிற்குத்தான் நம் நாட்டுப் பசுக்களும் பால் கொடுத்து வந்தன. இந்தப் பசுவிலிருந்து பால் கறந்து கொள்கிறோம் என்றால் கன்றுகளின் வயிற்றில் அடித்துவிட்டு, நாம் திருடிக் கொள்கிறோம் என்று பொருள்.

அடுத்த விலங்கின் பால் அருந்தும் உயிரினம் மனிதனைத் தவிர உலகத்தில் வேறு இல்லவே இல்லை. கன்றுகளே தாய்ப்பால் மறந்து விலகிச் சென்றவுடன் மனிதன் மட்டும் விலகாமல் சப்பிக் குடிப்பது என்ன நியாயம்? தந்தையும் மகனும் ஒரே காம்பில் பால் குடிப்பதற்கு வெட்கப்பட வேண்டாமா?



மனிதனுக்குத்தான் தாய் இருக்கிறாளே? ஏன் மாட்டை அம்மாவாக எண்ணி மாட்டுப்பால் குடிக்க வேண்டும்? மனிதனுக்குப் பிறந்தவன் தானே இவன்! மாட்டுக்குப் பிறக்க வில்லையே!

சாகும் வரை இவன் பால் குடிக்கிறானே, சாகும் வரை குழந்தைதானா? ஒரே ஒரு வேற்றுமை! குழந்தை சப்பிக் குடிக்கிறது. இவன் உறிஞ்சிக் குடிக்கிறான் அவ்வளவு தான் வேற்றுமை. சே! கொடுமையடா கொடுமை!

இவ்வளவு லிட்டர் லிட்டராகப் பால் குடிக்கும் மனிதருக்குத்தான் பால் சுரக்காத சிக்கல் வருகிறது. உலகில் 4300 பாலூட்டிகள் இருக்கின்றன. பால் சுரப்பு சிக்கல் மனித உயிரைத் தவிர வேறு எதற்கும் வருவதே இல்லை.

சரியாக சிந்திக்க முடியாதவனை, அறிவு கெட்டத்தனமாக நடந்து கொள்பவனை "நீ மாடா மனிதனா" என்று கேள்வி கேட்போம். மனிதப் பால் குடிப்பவன் மனிதானாக இருப்பான். மாட்டுப்பால் குடிப்பதால் தான் மனிதன் மிருகமாக வாழ்கிறானோ! சிலர் மந்தப் புத்தியாக இருப்பதற்கு இதுவும் காரணமாக இருக்குமோ!

பால் உற்பத்தியாவதற்காகத் தாய்மார்கள் பால் குடிப்பது தேவையற்றது. பால் கொடுக்கும் பசு பால் குடிப்பதில்லை. பால் கொடுக்காத மனிதருக்கு, ஏன் பால்?

மிகப் பெரிய உண்மை இன்னொன்று உண்டு. குழந்தையின் இரைப்பை நீர் கார நிலை. நேரடியாக பால் குடிக்கும் குழந்தையின் வயிற்றில் பாலை எளிதாக ஜீரணிக்கச் செய்யும் ரெனின் உண்டு.

வளர்ந்த மனிதனின் இரைப்பை நீர் அமில நிலை. மேலும், பாலினை செரிக்கச் செய்யும் ரெனின் குழந்தைக்கு இருப்பது போல வளர்ந்த மனிதனுக்கு இல்லை. ஆகவே பால் இயற்கைக்கு மாறான வேறு வழியில் செரிமானமாகிறது. கேடு செய்கிறது.

ஒரு குவளை பாலும் 2 வாழைப்பழமும் முழுமையாக செரிமாணிக்க 6 மணி நேரம் ஆகிறது. இந்த நிலையில் இரவில் பால் குடிப்பதும், குடித்தவுடன் படுப்பதும் தேவை தானா?

குழந்தைக்கு, பால் கொடுப்பதே, அதற்கு திட உணவை மென்று சாப்பிட பல் இல்லை என்பதால். குழந்தைகளின் இரைப்பையும், உமிழ்நீர் சுரப்பியும் திட உணவை செரிமானிக்கும் என்சைம்கள் இல்லாதது. ஆகவே குழந்தைகளுக்கு திட உணவு கொடுக்க முடியாது. அதே போல் பல் முளைத்துத் திட உணவுக்கு மாறிய பிறகு, குழந்தைப் பருவத்திற்கான பால் தேவையில்லை. அதாவது ***பல் முளைக்கும் வரைதான் பால்*** அவ்வளவு தான்.

உண்மை நிலை இவ்வாறெல்லாம் இருக்க, பால், பால் உற்பத்தி, பால் அருந்துதல், அதற்காக பசு வளர்த்தல் என்பதையெல்லாம் மறுபரிசீலனை செய்ய வேண்டிய காலக் கட்டத்திற்குள் வந்துவிட்டோம்! அல்லவா!



## 3. இயற்கைக்கு மாறான தீவன முறை

நம் குழந்தைகள் ஒரு நாளைக்கு எத்தனை முறை பால் குடிக்கின்றனவோ, தாயிடம் அண்டி கிடக்கும் கண் விழிக்காத நாய்க்குட்டிகள் எத்தனை முறை பால் அருந்துகின்றனவோ, அதுபோல் கன்றுகளும் தேவைப்பட்ட நேரத்தில் எல்லாம் பால் குடித்து வளர வேண்டியவைகள் தானே! ஒரு நாளைக்கு இரண்டு முறை பால் கறக்கும் போது மட்டும், பாலருந்த அனுமதிப்பது மிகப்பெரிய கொலைக் குற்றமல்லவா? அதிலும் பால் குடிக்கவிட வேண்டுமே என்பதற்காகக் கன்றுகளை விடுவதில்லை. பால் சுரப்புக்கான கருவியாக கன்றுகள் மோத விடப்படுகின்றன. கொடுமை! கொடுமை!! மனிதனுக்கு மன்னிப்பே கிடையாதோ! பசி பட்டினியோடு வளர்ந்ததால்தான் தமிழ்நாட்டுக் கால்நடைகள் சிறுத்துப் போய்விட்டன என்பது ஆழ்ந்து சிந்திக்கப்பட வேண்டிய ஒன்று.

கால்நடைகள் அசைபோடும் விலங்குகள் இவைகளின் வயிறு 4 அறைகள் கொண்டவை. இவைகள் சாப்பிடும் தீவனம் புல், பூண்டு, இலை, தழைகள் அடங்கிய நார்ப் பொருட்கள். இந்நார்ப் பொருட்களை செரிமானிக்க குடலுக்குள் இருக்கும் கோடிக்கணக்கான சிற்றுயிரிகள். இவைகளை சிதைத்து, அழித்து சிறுசிறு துண்டுகளாக்கி, செரிமானித்து மாட்டிற்கு வேண்டிய வைட்டமின் 'பி' காம்ப்ளக்சை உற்பத்தி செய்து கொடுக்கின்றன. மாட்டிற்கு வேண்டிய புரதத்தினை தயார் செய்து, சுய தேவையினை நிறைவு செய்து கொள்ளத் துணை புரிவதும் இதே சிற்றுயிரிகள் தான்.

அதாவது சிற்றுயிரிகள் இறந்து, சிதைந்து, இறைச்சி உணவு போல செரிமானித்து கிரகிக்கப்பட்டுக் கொள்கின்றன. அந்தந்த மாட்டிற்குத் தேவையான புரதத்தினை தன் வயிற்றில் உள்ள சிற்றுயிரிகளே தயார் செய்து கொடுத்து விடுகின்றன. சராசரி பால் அளவுக்குத் தக்கபடியான புரதம், தன் வயிற்றிலேயே உற்பத்தி செய்து கொள்ளும் திறன் படைத்தது கால்நடைகள். அதிகப்பால் உற்பத்தி செய்ய முனையும் போதுதான், வெளியிலிருந்து புரதச் சத்துக்களும் இன்ன பிறவும் வயிற்றுக்குள் திணிக்க வேண்டி நேரிடுகிறது. நம் நாட்டுப் பசுக்களின் பால் அடர்த்தியாகவும், சுவையாகவும், சத்து மிகுந்ததாகவும் பாலின் தரம் மாட்டின் வம்சாவழித் தரத்திற்கேற்பவும்

இருக்கிறது. வெளித்தயாரிப்பு அடர்தீவனம் கொடுத்துப் கறக்கப்படும் பால், தீவனத் தரத்திற்கு ஏற்ப மாறுபாடடைவதும், பாலின் சுவை, தரம் மாட்டைப் பொறுத்து அமையாமல், கொடுக்கப்படும் தீவனத்தைப் பொறுத்து அமைவதாகவும் இருக்கிறது. இயற்கையாகக் கிடைக்கும் மேய்ச்சல் தீவனம் நம் பசுக்களுக்கு (சராசரி பால் அளவுக்கு) போதுமானதாக இருந்தது.

பற்றாக்குறையைச் சரி செய்து கொள்ளவும், மேய்ச்சலுககுச் செல்ல முடியாத ( அடைமழை, தொற்றுநோய் பரவும் காலம், நிறை சினை காலம், கன்று ஈனும் காலம்) சூழ்நிலை ஏற்படும் போதும், கால்நடைகளின் பசியை போக்கிட விவசாயத்தின் துணைப் பொருட்களான வைக்கோல், சோளத்தட்டை, உளுந்து பயிர்களின் பொட்டுக்களை உணவாகக் கொடுத்து பராமரிக்கப்பட்டு வந்தன. என்றைக்கு அதிகப்பால் மீது ஆசைப்பட்டு, கறக்கத் தொடங்கினார்களோ, அன்றைக்கே அதிகப்பால் உற்பத்திக்கான கலப்புத் தீவனமும், இன்னபிறவும், கொடுக்கத் தொடங்கி, இயற்கை வாழ்வியலுக்கான கால்நடை வளர்ப்பே வணிகமயமாக்கலாக மாற்றப்பட்டு விட்டது.

பாலுக்காகத்தான் பசு என்ற எண்ணம் ஏற்பட்டவுடன் பால் உற்பத்திக்கான தீவன வகைகள் கொடுக்கத் தொடங்கியவுடன், மனிதன் சாப்பிட்டு வந்த சோளம், கம்பு, கேழ்வரகு இன்ன பிற தானிய வகைகள் பசுக்களுக்குத் கொடுக்கத் தொடங்கி, கால்நடைத் தீவன வணிகத்தையும் பெருகி வளரத் துணை புரிந்தாயிற்று.

இதன் வளர்ச்சி, புஞ்சைத் தானிய வகைகளையே ஒதுக்கி விட்டு அரிசி மட்டுமே சாப்பிட்டு வரும் நாகரீகத்திற்கு அடிமையாக்கி விட்டது. காலையிலும், இரவிலும் இட்டலியும், இடியாப்பம், தோசையும் சாப்பிட்டு வந்தாலும் எல்லாமே அரிசி தானே! இதனால் சோளச் சோறும், கம்பஞ்சோறும், வரகுச்சோறும், கேப்பைக் களியும் சாப்பிட்டுத் திடகாத்திரமாக வாழ்ந்து வந்த மனிதன், அரிசி மட்டுமே உணவாக எடுத்துக் கொள்ளும் நாகரிகம் கற்றுக் கொண்ட பிறகு, நோய் கொண்ட உடல்வாகு அமையப் பெற்று விட்டான். அசை போட முடியாத மனித உணவான சோளம், கம்பு கலந்த உணவை உண்ட பசுக்களும், செரிமான மண்டலம் பாதிக்கப்பட்டு நோயுள் வீழ்ந்து விடுகின்றன. இப்போது நோய்க்கிருமி தாக்குதலால் வரும் இயற்கையான நோய்களை விட, உடல் தேய்மானத்தை அவ்வப்போது கட்டமைப்புச் செய்து கொள்ள (புதுப்பித்துக் கொள்ள) இயலாததாலும் நாளமில்லா சுரப்பிகளின் மாறுபாடான இயக்கத்தினால் ஏற்படும் செயற்கையான நோய்களாலும் தான் மிகப் பெரிய அளவில் துன்பப் படுகின்றன.



கால்நடைகளுக்கு வரும் தொற்று நோய் அல்லாத சாதாரண நோய்கள் பெரும்பாலும் மாறுபாடான அல்லது தவறான தீவன முறையால் ஏற்படுகிறது. அசைபோடும் பிராணிக்கு அசைபோடத் தேவைப்படாத தீவனப் பழக்கத்தால் தான், வயிற்று நோய்கள் ஏற்படுகின்றன. இயற்கையான முறையில் இயற்கையான நார் பொருள் தீவனம் மேய்ந்து வந்த காலத்தில், இத்தனை வயிற்று நோய் ஏற்பட்டதில்லை. இப்போது விதம் விதமான ஜீரண மண்டல பாதிப்பு நோய்கள் பெருகி விட்டன. ஆக கால்நடைகளையும் நோய்க்குள் தள்ளி, மனிதர்களையும் நோய்ச்சிறைக்குள் மூழ்கடித்து வாழும் தடுமாற்ற நிலைக்கு, இன்றைய மனிதனே வழி வகை தேடிக் கொண்ட முதல் குற்றவாளி. ஆமாம் தானே!

# 4. இயல்பான கால்நடை வளர்ப்பு

அந்நியத்தைப் பார்த்து நாம் சூடு போட்டுக் கொள்வது அதிகமாகி விட்டது. ரஷ்யா, ஐரோப்பாக்கண்ட நாடுகளில் கடும் பனிப் பொலிவு. குளிர் காலத்தில் ஆறுகள் உட்பட நீர்நிலைகளெல்லாம் உறைந்து விடுகின்றன. அப்படிப்பட்ட நிலையில் அங்குள்ள மக்களுக்கு பதப்படுத்தப்பட்டு டப்பாக்களில் அடைக்கப்பட்ட உணவும், சிறிதளவு சாப்பிட்டு நீண்ட நேரம் பசியின்றி இருக்க வைக்கும் கொழுப்பும், பாலாடைக் கட்டியும், கேக்கும், ரொட்டியும் தேவைப்படக் கூடியவைகள் தான். அந்த உணவு முறை நமக்கு எதற்கு? தண்ணீர் வசதி இருந்தால் 4 போகம் விளைச்சல் எடுக்க வைக்கும் மண்ணல்லவா நம்முடையது! மண்ணுக்கேற்ற மரபை மறந்து விடுவது மிகப்பெரிய குற்றமல்லவா! நாம் என்ன சாப்பிட வேண்டும் என்பதை நாம் தான் முடிவு செய்து கொள்ள வேண்டும். இதற்குக் கூடவா அந்நிய ஆதிக்கம்?

குளிர் நாட்டுக்காரர்களுக்கு பால் உணவு அவசியப்படலாம். அவர்களுக்கு அரிசி உணவுக்கு வழியே இல்லை. நமக்கு எதற்கு?

இனிப்புப் பொருளாகிய ரசகுல்லா, பால்கோவா கூட நமக்குத் தேவையில்லையே?

நம் பாரம்பரிய உணவுமுறை போலவே, கால்நடைகளுக்கும் பாரம்பரிய தீவன முறை உண்டு. அது போதாதா நம் கால்நடைகளுக்கு! சோளம், கம்பு விதைப்பவர்கள் சூரிய ஒளி நன்றாகப் படக்கூடிய மூலையில், கால்நடைத் தீவனத்திற்காக நெருக்க விதைத்து பசுந்தட்டைத் தீவனமாகக் கொடுத்து வருவது, இன்னும் கிராமப்புறங்களில் மானாவாரி சாகுபடிப்பகுதியில் கடைப்பிடிக்கப்பட்டு வருகிற நற்பழக்கமாகக் காண முடிகிறதே!

கால்நடைப் பெருக்கத்தை ஒவ்வொரு குடும்பமும் அவசியமான ஒன்றாகக் கடைப்பிடித்து வந்ததுண்டு. மாடுகள் வளர்க்காத குடும்பங்கள் கூட ஒன்றிரண்டு இருந்திருக்கும். ஆடுகள் வளர்க்காத குடும்பம் இருந்ததே இல்லை. ஒவ்வொரு குடும்பமும் சமுதாய நலனுக்காக உணவுப் பொருள் உற்பத்தி ஏதாகிலும் செய்து கொண்டிருக்க வேண்டும் என்பது நாம் கற்று வைத்திருந்த தமிழ்ப் பண்பாடு.



இனப்பெருக்கத்திற்கு சரியான பொலி காளைகள் பராமரிப்பதை ஒட்டு மொத்த சமுதாயத் தொண்டு, கடமையாக எண்ணி செயல்பட்டார்கள். ஊருக்கு நான்கைந்து பொலி காளைகள் கோவில் மாடுகளாக பொதுச் சொத்தாகச் சுற்றித் திரிந்து கொண்டிருந்தன. எந்த நிலத்தில் எந்தப் பயிரில் எவ்வளவு வேண்டுமானாலும் மேய்ந்து உடல் வளத்தை பெருக்கிக் கொண்டன. மிதித்தழிக்கும் காளையை யாரும் விரட்டியடித்து அப்புறப்படுத்த மாட்டார்கள். காளைகளால் ஏற்படும் தீவன அழிப்பை, இழப்பை சமுதாய நலன் கருதிப் பொறுத்துக் கொண்டார்கள். ஊராரின் பொதுச் சொத்தல்லவா! ஊர்க் கன்றுகளின் தந்தையல்லவா!

பருவத்திற்கு வரும் பசுக்களை மோப்பம் எடுத்து, கூடி மனித உதவியின்றி கால்நடைகள் பெருகின. இப்போதுள்ள பழக்கம் போல நோஞ்சான் காளைகள், சந்ததி விருத்தியில் குறைபாடுள்ள காளைகள், பொதுவாகப் பிறவிக் கோளாறுள்ள மாடுகள், கொம்பு வளைந்தவை, ஐந்து கால் வினோத மாடுகள் கோவில் மாடுகளாகத் திரிவது போல அப்போது இல்லை. இது கழுதை, கட்டெறும்பான கதை. பொலிவுக்கான சரியான உடலமைப்பு, அவயவமுறை சுழி பார்த்து தேர்ந்தெடுக்கப்ப பட்டவைகள் கோவில் மாடுகளாக ஆக்கப்பட்டன. இக் காளைகளுக்குப் பிறந்த காளைகள் உடல்திறன், உற்பத்திக்கான வேலைத்திறன், நோய் எதிர்ப்பு சக்தி, குறியீட்டு ஒலிகளை எளிதாகப் புரிந்து கொள்ளும் மூளைத் திறமை கொண்டவைகளாக இருந்தன.

பிறந்த கன்றுகளில் ஏதாகிலும் சாய்ந்து வளைந்த கொம்பு, குட்டையான மெலிந்த கொம்பு, குட்டைவால், அடர்த்திக் குறைவான வால்குஞ்சம் போன்ற அமைப்பில் பிறந்த காளைக் கன்றுகளை சந்ததி விருத்தி செய்வதிலிருந்து தடுப்பதற்காகக் காயடித்தல் முறையை பயன்படுத்தினார்கள். கால்நடைகள் தரத்தில் குறைந்துவிடக் கூடாது என்ற எச்சரிக்கை!

எத்தனை சிரமப்பட்டாலும் சில மாடுகள், சண்டித்தனம், ஓடுகாலித்தனம், படுகாலித்தனம், திருட்டுத்தனம் கொண்டவைகளாக இருக்கும். இவைகளை விலக்குவதற்காக, சந்ததி விருத்தியிலிருந்து தடுப்பதற்காக காயடித்தலை மேற்கொண்டார்கள். இதற்கு மேல் அவைகளை

முற்றாக அழித்துவிட எண்ணுவதையே பாவமாக எண்ணினார்கள். அதுதான் உயிர்ம்ம நேயம்.

ஊரில் உள்ள அத்துணை காளைகளும் பொலி காளைகளாகத் திரிந்தால் பருவத்திற்கு வந்த பசுக்கள் என்ன செய்யும்? பொலி காளைச் சண்டை வரும். இதுவும் ஒரு வித வதைதானே! தடுத்துத்தானே தீர வேண்டும்.

வேலைத் திறனுக்கு காயடிக்கப்பட்ட எருதுகள் போதும். வேலைத் திறமையை முழுமையாகப் பயன்படுத்திக் கொள்ள வேண்டுமானால் காயடிக்கப்பட்டேயாக வேண்டும் என்ற உயரிய வாழ்வியல் நோக்கத்திற்காக ஆண்மை நீக்கம் செய்து பயன்படுத்திக் கொண்டார்கள். வன விலங்குகளை மனை விலங்குகளாக மாற்றிப் பயன்படுத்த இதுதானே சரியான அறிவியல் வழி.

ஆனால் ஒட்டு மொத்த காளைகளையே காயடித்து அழித்தொழித்து, இயற்கைப் பொலிவே இல்லாமல் செயற்கை முறையில் கருத்தரிக்க வைத்து, அதிகப் பால் உற்பத்தி நோக்கில் அடி எடுத்து வைத்தது தான் மிகப் பெரிய தவறாக முடிந்து போயிற்று. ஆண் இனம் முழுவதுமே அழிக்கப்பட்டதைப் பார்த்தவர்கள், பாலுக்காக மட்டும் என்றால் பசு போதும் என்ற புரிதலுக்குள் கட்டாயமாக இறக்கப்பட்டார்கள்.

இதனால் விளைந்த கேடுதான் விவசாயத்துறையில் பெரும் மாற்றங்களை ஏற்படுத்தி விட்டன. நஞ்சான உணவு உற்பத்தி நோக்கி எடுத்து வைத்த முதல் அடிதான் காளைகளை அழித்துவிட்டு, அந்த இடத்தில் டிராக்டர்களை இறக்கி விட்டது. அதனால் நம் பாரம்பரிய நிலவளம் இழந்து, மலடாகி, விளைச்சல் குறைந்து போயிற்று. மனிதனும் பல்வேறு நிலை நோய்களுக்குள் தன்னை தள்ளிக் கொண்டு தத்தளிக்கும் நிலை ஏற்பட்டு விட்டது.

இயற்கைப் பொலிவு மூலம் பிறந்தவைகள் இயற்கையான வீரியத்துடன் இருக்கும். சிரமமில்லாமல் சினையும் பிடிக்கும். இப்போதைய நிலையில் இன்னும் சில தலைமுறைகள் கழிந்தால், சினை பிடித்தல்கூட சரியாக நடக்காத நிலை ஏற்படலாம் தானே! ஒட்டு மொத்த கால்நடைகளையே இழக்க நேரக் கூடும் தானே! மிகப் பெரிய அழிவு வேலைக்கு வித்திட்டதாக அமைந்த விடுமோ என்ற கவலை ஏற்படுகிறது.



சந்தையில் விற்கப்படும் பசுக்களில் கர்ப்பப்பை கோளாறுகளால் தான் பெரும்பாலான உயர் இன, கலப்பினப் பசுக்கள் அடிமாட்டிற்கு விற்கப்படுகின்றன என்கிற உண்மையை கவலையோடு எண்ணிப்பாருங்கள்; கண்கள் கலங்கும்.

அப்படியானால், கால்நடைகளை இழந்து விட்டு விவசாயமா? முடியுமா? ஒரு வேளை, இப்படி இருக்கலாமோ! இந்திய விவசாயம் கால்நடைகளைச் சார்ந்தே இருக்கிறது. சுயதற்சார்பு நிலையில் இந்திய விவசாயம் இருப்பதை சிதைப்பதற்காக, தொலைநோக்குத் திட்டத்தில் சிந்தித்து ஆண்மை நீக்கம் என்னும் ஆயுதத்தை கையில் எடுத்துக் கொண்டு, காளை இனத்தையே அழித்தொழிக்க திட்டம் தீட்டப்பட்டதோ என்கிற ஐயம் ஏற்படுகிறதே! உண்மையாக இருக்குமா? நம் விவசாய உற்பத்தியை அழிக்கத்தான் காளைகள் காயடிக்கப் பட்டனவோ!

இன்னொன்றும் ஆழ்ந்து சிந்திக்க வேண்டும். உலகில் முட்டையிட்டு, அடைகாத்து, குஞ்சு பொறிக்கும் உயிரினங்கள் உண்டு. முட்டையிட்டு அடைகாத்தல் என்பது தேவைப்படாமல் சாதாரண வெப்பநிலையிலேயே (($30^0$) குஞ்சு பொறிக்கும் உயிரினங்கள் உண்டு.

முட்டையிட்டு மண்ணால் மூடி, குளிர்ச்சியும் வெப்பமும் மாறி மாறி பாதுகாப்புக் கொடுத்து, குட்டிகள் பிறந்து, கடலுக்குள் ஓடி, உயிரினங்களாக பெருகும் ஜீவன்களும் உண்டு.

ஆக அந்தந்த ஜீவன்கள் அதனதன் இயற்கை அமைப்புக்குத் தக்கவாறு, தன் இனத்தை பெருக்கிக் கொள்வதற்கு, வழிவகை தெரிந்து இன்றுவரை உலகில் நீடித்து நிற்கின்றன. இந்த இயற்கைச் சூழல் மாறுபடும் போது சந்ததி விருத்தி தடுக்கப்பட்டு விடுகிறது எனபதும் இயற்கையே. அதைப்போல காளைகளும், பசுக்களும், அதனதன் சந்ததியை பெருக்கி வந்த இயற்கை வரம்பினை உடைத்து, காளைகளை அழித்து விட்டு, அந்த இடத்தில், செயற்கை ஊசி ஆயுதங்களைப் புகுத்தியது இயற்கைக்கு மாறானது. இந்த செயற்கை எந்திரத்தனம் இல்லையென்றால் மாட்டு இனம், அழிக்கப்பட்டு விடும் என்பது தானே உண்மை.

அப்படிக் கால்நடை இனம் முழுதும் இன்று மனித உதவி இல்லை என்றால் கால்நடைகளே அழிந்து பட்டு விடும் தானே!

மிக உயரிய அல்லது தனித்துவம் மிகுந்த வம்சா வழி தன்மை கொண்ட ஜீன்களை பாதுகாப்பதற்காகவும், நீண்ட காலம் பயன்படுத்த வேண்டும் என்பதற்காகவும் அறிவியல் கண்டு பிடிப்பு முறை பயன்படுத்தி இருக்க வேண்டும். உறை விந்து பயன்பாடு, இத்தோடு நிறுத்தியிருக்க வேண்டும்.

அதனை விடுத்து, அன்றாட சந்ததி விருத்தி நடைமுறைக்கே, எந்திரத்தனத்தைப் புகுத்தியது தவறா இல்லையா?

மனிதன் இடையில் புகுந்தது தவறு தானே? ஒரு ஊருக்கு ஐந்து பொலி காளைகள் போதுமே! பொலி காளை வளர்க்க ஊதியம் கொடுத்து விட்டால், பிரச்சனை தீர்ந்து விடும்.

அந்த காளைகளை அடிக்கடி சோத்தித்துப் பார்த்துக் கொள்ள அரசினரின் கால்நடைத்துறை இருக்கிறது. சரியான வழிமுறையும் திட்டமிடலும், கால்நடை வளர்ப்பைக் காப்பற்றுவதும் நம் கையில் இருக்கிறது. உரியவர்கள் சிந்திக்க வேண்டும்.



## 5. தற்சார்பை உடைத்தல்

ஆம்! உண்மையே! தங்களிடமுள்ள வேளாண் கருவிகளைக் கொண்டு உழவு வேலை செய்து கொள்ள முடியும். தங்களிடமுள்ள விதைகளைக் கொண்டு விளைச்சலைப் பெருக்கிக் கொள்ள முடியும். கால்நடைகளின் திறனைப் பயன்படுத்தி அனைத்துவித விவசாய வேலைகளும் செய்து கொள்ள முடியும். தற்சார்பில் அசைத்திட முடியாத வளம் நிறைந்தவர்கள் நம்மவர்கள்.

இவர்களைப் பொருளாதார விடுதலைப் பெற்று விடாதபடி, மறைமுகமான நவீன வகை முற்றுகைக்குள் அழுத்தி வைத்தாக வேண்டும். சுயசார்பு கவசத்தை உடைத்தெறிந்தாக வேண்டும். அதற்கு வெண்மைப்புரட்சி தான் சரியான அழித்தொழிப்பு சித்தாந்தம். எதிர்கால நிகழ்வுகளை யூகித்தறிய முடியாத நிலையால், நிகழ்கால கவர்ச்சியில் மயங்கி விட்ட மக்களின் தார்மீக ஆதரவின் பலம் வேறு. இதற்கு மாறுபட்ட கருத்து, அத்தனை எளிதாக உயிர் பெற்று, முளைத்து முண்டி வெளிச்சத்திற்கு வந்துவிடாது!

காளைகளை அழித்து விட்டால் அந்த வேலைகளை செய்ய டிராக்டர்கள் இறக்கப்படும். டிராக்டர்களை உற்பத்தி செய்யும் அந்நியத் தொழிற்சாலைகள் பெருகும்.

ஆண்மை நீக்க ஆயுதத்திலிருந்து தப்பித்து எஞ்சி நிற்கும் காளைகளையும் அழித்தொழிக்க வேண்டுமே! உணவு கிடைக்க முடியாமல் பட்டினி போட்டு விட்டால்? முடிந்தது கதை.

நம் நாட்டில் கால்நடைகளுக்குக் கிடைக்கும் நார்ப்பொருள் தீவனம் பெரும்பாலும் வைக்கோல், சோளத்தட்டை மட்டுமே! வைக்கோல் கிடைக்காமல் செய்து விட்டால்? நெற்கதிரும், அடித்தாளும் மட்டுமே இருக்கக் கூடிய குட்டை ரகமான வைக்கோல் இல்லாத நெற்பயிரை பசுமைப்புரட்சி பெயரால் புகுத்தி விட்டால்? கால்நடைகளுக்கு வைக்கோல் இல்லாமல், ஏழை பாழைகள் கால்நடைகளை விற்றுத் தீர்த்து விடுவர். அதிக பால் கறக்கும் பசுக்களின் மடியை காட்சிப் பொருளாகக் கவர்ச்சியாகக் காட்டி, இப்போது இருக்கும் பசுக்களையும் கேவலப்படுத்தி விற்றுவிடச் செய்துவிடலாம்.

அதிக பால் உற்பத்தி, அதிக வருவாய், கடன் வசதி, மானியம், தள்ளுபடி என்று ஆசைகாட்டி விட்டால் நோக்கம் நிறைவேறிவிடும். இலவசம் பெறுதற்கு உயிரை விடத் துணிந்தவர்கள் தானே நம்மவர்கள். விவசாயத் தொழிலாளர்கள் துணைத் தொழிலாகவும், மாற்றுத் தொழிலாகவும் பசு வளர்க்கத் தொடங்கி, மீண்டும் கடனில் உழல விட்டு விடலாம். விவசாயமும் கடன் வளர்க்கும் தொழில்; கால்நடை வளர்ப்பும் கடன் சுமை ஏற்கும் தொழில். உற்பத்தித் தொழிலில் ஈடுபடுபவர்களுக்கு வசதி வாய்ப்பு பெருகிவிட்டால், வேறு காசு பார்க்கும் தொழிலுக்கு மாறி விடுவார்கள் என்கிற அச்சம்; வறுமையிலேயே வைத்திருந்தால் தான், மேலும் மேலும் உழைத்துக் கொண்டே இருப்பார்கள். உழைப்பவர்கள் வேண்டுமே! அதற்காகத் தான் இத்தனை ஏற்பாடு.

சுய அறிவில் சிந்திக்க இடமே கொடுக்காமல் மூளைச் சலவைக் குள்ளாகவே, வெளுத்து வெள்ளாவியில் வேக வைத்துச் சிறுகச் சிறுகக் கொன்று விடலாம்! உழைக்கும் வர்க்கத்தை நிரந்தரமாகவே உழைக்க வைத்து விட்டு, உல்லாசவாசிகள் கொஞ்சம் கூட சஞ்சலப்படாமல் வாழ்ந்து களிக்கச் செய்யப்பட்ட "சொர்க்கவாசல்" திறப்பல்லவா இது!

டிராக்டர் இறக்கப்பட்ட நிலம் கெட்டிப்பட்டு காற்றோட்டமில்லாத கான்க்ரீட் தளமாக மாறிவிடும். மண்புழுக்கள் இறந்துபட்டு விடும். அதனை ஈடு செய்ய இரசாயன உர சிபாரிசு, கால்நடைகளைத்தான் அழித்தாயிற்றே! ஆகவே தொழு உரத்திற்கு வழியில்லை. இரசயன உரத்திற்கு அமோக வரவேற்பு. இரசாயன இடு பொருட்களால் தண்ணீர் தேவை அதிகரிப்பு; பற்றாமை; இழுபறி; நீருக்காகப் போராட்டம். நிலத்தடி நீரும் உறிஞ்சப்பட்டு நிலமும் வறட்சி நிலை.

நிலத்தடி நீரை உறிஞ்சி எடுக்க எந்திர சாதனங்கள் உற்பத்தி. நிலத்தடி நீர் என்பது பூமித்தாயின் ரத்தம். அதனை உறிஞ்சி எடுப்பதற்கு யாருமே தயக்கம் காட்டவில்லை; மறுக்கவில்லை, எதிர்ப்பு காட்டவில்லை. எந்திர மயமாக்கல் திட்டமும் வெற்றி. ஆக, விவசாயிகள் என்ன தொழில் செய்தாலும் அடிமட்ட வாழ்க்கையிலிருந்து மீள முடியாத நச்சுச் சுழல்.

முழுக்க முழுக்க தற்சார்பை இழந்து, அந்நியத்தை நம்பி வாழ வேண்டிய நிலைமையை உலக நாடுகளில் மெல்ல மெல்லப் புகுத்தி, உலகமகா



வல்லரசு நிலையை தக்க வைத்துக் கொள்ளல். இது தானே நடப்பது. இது தானே அறிவியல் அறிஞர்களும் புரிந்து கொள்ள முடியாத பின்னல் வலை. இன்றைய எதார்த்தமான வாழ்க்கை முறையாகத் தெரிகிறது.

ஆக, நாம் கோடிக்கணக்கான காளைகளை இழந்தோம். பூரணமாக நிரம்பியிருந்த தற்சார்பை இழந்து எந்திரமயமாக்கலை ஏற்றுக் கொண்டோம் என்பது உண்மை! உண்மையே!

இவைகளுக்காகப் பயன்படுத்தப்பட்ட ஆயுதம் **அபரிமிதப் பால் உற்பத்தி** என்ற மயக்கு மொழி.

காளைகளை அழித்து விட்ட பிறகு பசுக்களின் பிறப்பு குறைந்து போய்விடும் என்பது யாரும் புரிந்துக் கொள்ளக் கூடியதே! பசு பிறப்பு குறைந்தவுடன் ஈடு செய்ய உயர் இனம் என்ற பெயரில் அயல் இனம் புகுத்தி, **வெண்மைப்புரட்சி** என்ற பெயர் சூட்டு வைபவம் வேறு.

அந்நிய இனம் என்று வேண்டுமானால் சொல்லிக் கொள். அதென்ன உயரினம்? எந்த விதத்தில் அது உயர்ந்தது?

அயல் நாட்டினது என்றாலே உயர்ந்தது என்று நம்மைத் தாழ்த்திக் கொள்வது; கேவலப்படுத்திக் கொள்வது. இதற்குப் பெயர் தானே அடிமைத்தனம்.

இறக்குமதி செய்த அந்நியப் பசுக்கள் தான் முழுப்பயன் அளித்ததா? அதுவும் இல்லை. ஏன்? அதன் சந்ததிகள் சினை பிடிக்காத தொல்லைக்குள் வீழ்ந்து விட்டன! எப்படி?

# 6. பாலுணர்வு குறைந்த அந்நியப்பசு

இறக்குமதி செய்யப்பட்ட அந்நியப் பசுக்கள், காளைகள் குளிர் நாட்டைச் சேர்ந்த வம்சா வழித்தன்மை கொண்டவைகள். குளிர் நாட்டில் எப்போதுமே பாலுணர்வு மந்தமாகவே இருக்கும். நம் நாட்டில் கூட வெப்ப நாட்களில் பாலுணர்வு இருப்பது போல குளிர் நாட்களில் இருப்பதில்லை. இழுத்திப் போர்த்திக் கொண்டு படுத்துறங்கத்தானே மனம் விரைகிறது. அப்படி இயற்கையாகவே பாலுணர்வு மந்தமானப் பகுதியிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட கால்நடைகள் இயற்கையாகவே பாலுணர்வு குணம் குறைவாகக் கொண்ட வம்சா வழித்தன்மை கொண்டிருக்கும் தான். நாட்டுப் பசு சிரமம் கொடுக்காமல் சினை பிடித்தது போல, அயல் இனப்பசுக்களால் முடியவில்லை. சினை பிடிக்க வைப்பதற்குள் ஏகப்பட்ட சிரமங்கள், செலவுகள், இதனைத் தாங்க முடியாத ஏழைகள், இருக்கும் பசுக்களையும் விற்றுவிட்டு, வெற்று ஆளாக கூலி வேலைக்குப் பறந்து, நகர் புறத்தை நாடிச் செல்லும் இழிநிலையை ஏற்படுத்திக் கொடுத்து விட்டோம். அயல்நாடுகள் சென்று வந்த நம் நாட்டு அறிஞர்களும் ஐநூறு மாடுகள், ஆயிரம் மாடுகள் உள்ள பண்ணைகளைப் பார்த்து விட்டு வந்து கதைத்தவைகளையும் கேட்டு, வாய் பிளந்து நின்று விட்டோம். அங்குள்ள நிலைமை வேறு. இங்கு பசு வளர்த்தல் என்பது, ஒரு மாடு, இரு மாடு வைத்துக் கொள்ளும் குடிசைத் தொழிலாக உயிர் பிழைத்துக் கொண்டிருக்கும் நிலை. பல குடும்பங்கள் ஆடு மாடுகள், கோழிகள் வளர்த்தே உயிர் பிழைத்து வருகின்றன. அவர்கள் பிழைப்பிலும் மண் அள்ளிப் போட அடிமடியில் கை வைத்தாயிற்று. ஆக கிராமத்து மக்கள் பரம்பரையாகப் பார்த்து வந்த செலவில்லாத சுதந்திரமான உற்பத்தித் தொழிலிருந்து திசை திருப்பப்பட்டு நகர் புறத்தில் கூலி பெறும் அடிமை வேலைக்கு ஆர்வப்பட வைத்தாயிற்று. மாடு வளர்ப்பு மிகப் பெரிய சுமை போலத் தோற்றம் பெற்றும் விட்டது. அநாகரீகத் தொழிலாக மதிப்பிடப் பட்டு விட்டது. இப்படி மக்கள் மனநிலையில் மாற்றம் பெறச் செய்ததே மிகப் பெரிய **தேசிய இழப்பு** என்பதாக அரசு எந்திரம் எண்ணிப் பார்க்கவே இல்லை.

இயற்கை பொலிவுக்கும் வழியில்லை. செயற்கை முறை கருவூட்டலுக்கும் செலவு செய்திட இயலவில்லை. பெரும்பாலான பசுக்களும் பருவ அறிகுறி காட்டாமல் காலத்தை ஓட்டுகின்றன. வெற்றுப் பசுக்களுக்கு தீவனமளிக்க அரசு உதவவில்லை. தன் வயிரை, உயிரைக் காப்பாற்றிக் கொள்ள, இருக்கும் பசுக்களை விற்று விடுவதைத் தவிர விவசாயிக்கு வேறு வழியுமில்லை. என்ன செய்ய?



இழுத்து மூடப்பட்ட ஆலைத் தொழிலாளர்களுக்கு பாதிச் சம்பளம் தரப்படுகிறது. பசுக்கள் – வெற்றுப் பசுக்கள் – சினைப் பிடித்தலில் சிக்கல் ஏற்பட்ட பசுக்களின் பராமரிப்புச் செலவுக்காக ஏழைத் தொழிலாளிக்கு ஏதாகிலும் கருணை காட்டியிருக்கிறதா அரசாங்கம்? உணவு உற்பத்தி என்பதே ஏழை விவசாயிகள் மட்டும் செய்து தீரவேண்டிய கட்டாயத் தொழில் தாமா? விடுதலையே இல்லையா?

அறிவியல்படி இன்னொரு உண்மையும் கருத வேண்டியிருக்கிறது. வேலைத்திறன் அதிகமுள்ள இனத்திற்கு (காங்கேயம் போல), அதிகப் பால் உற்பத்த செய்யும் திறன் குறைவு. அதிகப்பால் கொடுக்கும் திறன் படைத்த பசுக்களுக்கு (சிந்தி போல), பிறக்கும் காளைகளுக்கு வேலைத்திறன் குறைவு. இரண்டு வம்சா வழிக் குணங்களும் நேர் எதிர் எதிரானவை. இரண்டு வகைகளும் நேர் எதிர் எதிரான நாளமில்லா சுரப்பிகளின் செயல்பாடுகள் கொண்டவை. ஒன்றிலிருந்து இன்னொன்றை பெற முயற்சிப்பது பைத்தியக்காரத்தனம். பால் கொடுக்கும் ஜெர்சி இனமும், வேலைத்திறன் மிகுந்த காங்கேயமும், கலப்பு செய்யப்பட்டது கூட அரசாங்கப் பண்ணைகளில் நடந்தேறின.

அதிகப் பால் கொடுக்கம் பசு இனத்திலிருந்து அதிக வேலைத்திறன் தேவைப்பட்ட காளைகளை எதிர்பார்ப்பது மிகப் பெரிய தவறு. நமக்கு வேலைத்திறன் படைத்த காளைகள் தான் வேண்டும். இதுவே நம் முழுமுதற் தேவை என்பதை கருத்திற் கொள்ளாது, வெண்மைப் புரட்சிக்கு வெண்சாமரம் வீசி விட்டோம்.

பால் உற்பத்திக்கான நாளமில்லா சுரப்பு நீர் வேறு பருவக்காட்டலுக்கான நாளமில்லா சுரப்பு நீர் வேறு. நேர் எதிர் எதிரானது என்று கூடச் சொல்லாம். குழந்தை பிறந்து பால் கொடுத்து வரும் போது மாதவிடாய் தள்ளி போவது இதன் அடிப்படையில் தான். கறவை மாடுகளுக்கு பருவ உணர்வு வரும் போது பால் குறைவு ஏற்படுவதும் இதன் அடிப்படையில் தான். அப்படி பால் அதிகம்

கறக்கும் பசுக்களிடம் முழு அளவு பருவ அறிகுறி காட்டலும், அப்படியே பருவத்தைத் தெரிந்து கொண்டாலும், கரு பை வெடித்து முட்டை கருக்குழாய் வந்தடைவதும், துல்லியமாக மிகச் சரியாக நடைபெறக் கூடிய அளவுக்கு நாளமில்லா சுரப்பிகளின் செயல்பாடு இருக்கும் என்று அறுதியிட முடியாது. சினை பிடிக்காத நிலை ஏற்படத்தான் செய்யும் என்பதே இயற்கை. இந்தச் சிரமம் நம் விவசாயிகளுக்குத் தேவை தானா? நாமாக வெண்மைப்புரட்சி மூலம் தருவித்துக் கொண்ட வாதையில்லையா?

தமிழ்நாடு பூமத்தியரேகைக்கு மிக அருகில் உள்ள பகுதி. இங்கே வெப்பமும் சரி, குளிரும் சரி மிதமான நடுநிலை அளவில் இருக்கக்கூடிய பகுதி. இங்கு பாலுணர்வும் சரி, பால் உற்பத்தியும் சரி, மிதமான நடுநிலை அளவில்தான் இருக்கும். இப்படிப்பட்ட நடுநிலையை சராசரி மாடுகள்தான் இங்கே செழிப்பாக, எந்தத் தொந்தரவும் இன்றி வளர்ந்து பலன் கொடுக்க முடியும். இதை உணராமல் குளிர்நாட்டு பசுக்களுக்கான விதைகளை இறக்குமதி செய்தது மிகப் பெரும் தவறல்லாவா ? அந்நிய மோகம். எதற்கெடுத்தாலும் மேலை நாட்டு வாழ்க்கை முறையில் ஆர்வம்.

கன்று ஈன்ற 60 நாட்களில் பருவம் வந்துவிட வேண்டும் எனபது கணக்கு. பருவத்திற்கு வந்த பொலிவு செய்யப்பட்டு சினையாகிட வேண்டும் என்பது நம் ஆவல். சினை பிடித்த நிலையிலும் தொடர்ந்து பால் கொடுத்துக் கொண்டிருக்க வேண்டும் என்பது நம் எதிர்பார்ப்பு. அதாவது வருடம் 365 நாட்களில் 305 நாட்கள் பால் கொடுத்துக் கொண்டிருக்க வேண்டும் என்பதோடு, மீதமுள்ள 60 நாட்கள் நிறை சினை காலமாக, அடுத்த கன்று ஈன தயாரித்துக் கொள்ள வேண்டும். இயற்கை வளர்ப்பு முறையிலேயே இந்தச் சாதனை செய்து கொள்ள கற்றுக் கொடுத்திருக்க வேண்டும். ஆக பசு, ஒரு உயிரினம் என்பதை மறந்து, உயிரிகளின் வாழ்க்கையே நாளமில்லா சுரப்பிகளின் செயல்பாட்டில் அடங்கி இருக்கிற அடிப்படை உண்மையை மறந்து, அதில் ஒரு வித எந்திரத் தனத்தை எதிர்பார்த்து பசு இனத்தையே உயிருள்ள எந்திரமாகக் கருத வெண்மைப் புரட்சி கற்றுக் கொடுத்து விட்டது. இது இயற்கைக்கு மாறானதல்லவா! இயற்கையை வெல்ல நினைத்தது எப்படி சரியான அணுகு முறையாகும்?



பிறந்த மனிதனுக்கு உலகில் வாழ முழு உரிமை இருப்பது போல, மற்ற உயிரினங்களுக்கும் உண்டு என்பது தானே உயிர்ம நேயம்! மனிதன், தான் மட்டும் வாழ, மற்ற உயிரினங்களை எல்லாம் அழித்தொழித்து அல்லது காயடித்து உழைக்க வைத்து, பிழிந்தெடுத்து, கொடுமை செய்திட, மனிதனுக்கு மட்டும் என்ன தனிப்பட்ட உரிமை இருக்கிறது?

உலகில் மனிதன் என்ற அளவில் எல்லோருமே மனிதனாக இருந்தாலும், அந்தந்த நாட்டிற்குரிய தட்ப வெப்ப பாரம்பரிய உணவு முறைக்குத் தக்கவாறு உருவ அமைப்பு, நிறம், முடிநிறம், கண் நிறம், நோய் எதிர்ப்பு சக்தி இன்னும் பிறவைகள் அமைந்திருப்பதை எப்படி ஒன்றாக்க முடியாதோ, அப்படி, அந்தந்த நாட்டிற்குரிய முறையில் வளர்ந்துள்ள கால்நடைகளையும் ஒன்றாக்க எண்ணியது தவறுதான் இல்லையா?

# 7. பால் மனிதருக்கான இயற்கை உணவே அல்ல

இத்தனை சிரமப்பட்டு உற்பத்தி செய்யும் பால், மனித வர்க்கத்திற்குத் துணை புரிகிறதா என்றால் அதுவும் இல்லை. ஒட்டு மொத்த மனித இனமே நோய் நொடியில் தள்ளப்பட, பாலும், பால் பொருட்களும் தான் முக்கியமான அடிப்படை ஆதாரமாக இருக்கிறது.

பாலுடன் சேர்த்து, பால் சுரப்புக்கான நாளமில்லா சுரப்பு நீரும் (ஹார்மோன்) உட்கொண்டு வருகிறோம் என்பது அப்பட்டமான உண்மை. சராசரி அளவுக்கு மேல் அல்லது தாங்கும் சக்தி அளவுக்கு மேல் அல்லது குறைந்த அளவேயானாலும், அடிக்கடியும், நீண்ட நெடிய காலத்திற்குத் தொடர்ந்து உட்கொண்டு வருவதாலும் அந்தச் சுரப்பு நீரின் தாக்கம் கொஞ்சம் கொஞ்சமாக உட்கொள்பவர்களின் உடலில் நஞ்சாக ஏற்றப்படுகிறது தானே! பால் சுரப்புக்கான பெண் ஹார்மோனை பிறந்த காலம் முதல் பெண் குழந்தைகளுக்கு ஊட்டி வந்தால், உடல் ரீதியாக என்னென்ன பின் விளைவுகள் ஏற்படும் என்பதற்கான அடிப்படை ஆராய்ச்சி செய்யப் படாமலேயே அதிகப் பால் தரும் அந்நியப் பசுக்களை ஏற்றுக் கொண்டு விட்டோம். பாலுணர்வுக்கான உறுப்புகள் வளரத் தொடங்கும் முன்னதாகவே அவைகள் செயல்படுவதற்கான ஹார்மோனை கொடுத்தால்? ஊசி மூலம் செலுத்துவதை விட, உணவு மூலம் கொடுப்பது வீரியம் குறைந்துள்ளதாக இருக்கும் தான்; இருந்தாலும் நீண்ட காலத்திற்குக் கொடுத்து வந்தால், அதன் பக்க விளைவுகள் என்னென்ன விளைவிக்கும் என்று ஆராய்ந்திருக்க வேண்டியது நம் கடமை தானே!

இப்படி வைத்துக் கொள்ளலாம். அந்நியப் பால் குடித்த 30 ஆண்டு காலத்தை சோதனைக் காலமாக, ஆராய்ச்சி காலமாக எடுத்துக் கொள்வதாக இருக்கட்டும். இரண்டு தலைமுறைகளில் அன்னியப்பாலின் வேகம் நம் உடலில் என்னென்ன மாறுதல்களை கெடுதல்களை ஏற்படுத்தியுள்ளது என்றறிந்து எச்சரிக்கை அடைந்திருக்க வேண்டாமா? பாலுணர்வு உறுப்புகள் வளர்வதற்கு முன்னதாகவே அவைகள் செயல்படுவதற்கான நாளமில்லா சுரப்புநீரை உட்கொண்டால் மறத்துப் போகச் செய்வதாகாதா?



இதனால் நாட்டில் விளைந்த கேடுகளை பட்டியலிட்டு பார்த்தால் நம் சந்ததிகளை எவ்வளவு சீரழித்திருக்கிறோம் என்று மலைக்க வைக்கிறது.

**1. இளவயதிலேயே பருவமடைதல்**

முற்காலத்தில் 15, 16 வயதுகளில் பருவமடைந்த பெண்மக்கள், இப்போது 10, 11 வயதிலேயே பருவமடைவது வளர்ச்சியல்லவே! ஏதோ தேய்மானத்திற்கான அறிகுறியாக ஏன் எடுத்துக் கொள்ளவில்லை? பிஞ்சிலே பழுப்பதும், வெம்புவதும் ஏறக்குறைய ஒன்று தானே! 13 வயதிற்குள்ளாகப் பருவமடையும் பெண்களுக்கு கர்ப்பப்பை பிடிப்புக்கான தசைநார்கள் வலுவற்று இருப்பதுடன், இடுப்பு எலும்புக் கூடும் வலுவிழந்துதானிருக்கும் இதனை விட பெரிய தீங்கு என்ன நேரிட வேண்டும்?

**2. வாலிபப் பருவத்திலேயே விலக்கு நின்று போதல்**

மிகப் பிஞ்சு வயதிலேயே தூண்டிவிடப்பட்ட உறுப்புகள் செயல் பாடிழந்து, நடுப் பருவ வயதிலேயே ஓய்வு பெற்று விடுதல்தானே மாதவிலக்கு நின்று போதல்! பூத்துக் காய்த்து பலன் கொடுக்கும் பருவத்தில் முதுமை அடைந்து முற்றி, முழுதும் துறந்து விடுதல் என்பது பொருள். பழுத்துப் பலன் கொடுக்கும் பருவத்தில் பட்டுப் போய் விடுவதா? இதுதான் வாழ்க்கையா? இதற்குத்தான் பிறந்தோமா? உயிரின் இயற்கையே பாலுணர்வு இன்பம் தானே! இதனை இழந்து விட்டு எதற்காக வாழ்கிறோம்? மன மகிழ்ச்சிக்குத் தானே வாழ்க்கையே! மகிழ்ச்சியில்லா வாழ்க்கை எதற்காக? அவசரப்படாமல் ஆழ்ந்து அனுபவிக்கும் பருவத்தில் எல்லாமே முடங்கி போய் விடுவது என்றால் கொடுமையிலும் கொடுமையில்லையா?

**3. பருவ அழகு இல்லாமை**

பருவ மங்கை என்றாலே எடுப்பான வளமையான பூரிப்பான நிமிர்ந்து நிற்கும் மார்பகத் தோற்றமே. இப்போது முண்டி முளைத்து வரும்போதே, இளமை, வளமை, வனப்பு என்பதெல்லாம் அறவே இல்லாமல் துவண்டுத் தொங்கி ஏதோ அறிகுறி காட்ட இருக்கிறது என்பதாகக் காட்சியளிப்பது மனித வர்க்கத்தின் அழகையே கெடுத்து வருவதாக உணர முடியவில்லையா? கிராமப்புறத்தில் பால் சாப்பிட வசதியற்ற குடும்பங்களில் உள்ள இளம் பெண்கள் முற்காலம் போல நல்ல வளர்ச்சியோடு "தலைநிமிர்ந்து" வாழ்ந்து வருவதை காணமுடிகிறது தானே!

பால்மடி, ஆண்மைக்கான பாலியல் சுரப்பியை தூண்டிவிடும் "பாலியல் அவயமாகப்" பயன்படுவது மனிதரில் மட்டுமே! வள்ளுவரும் அதனால் தான் "முலையிரண்டும் இல்லாதாள் காமுற்றற்று" என்று கூறினார். அப்படியானால் பாலுணர்வுக்கு அவசியமான பால்படி உருவாவதில் கோளாறு என்றால், பாலுணர்வு வாழ்வில் கோளாறு என்று பொருள். இந்தக் கோளாறுடன் தான் வாழப் போகிறோம்.

**4. பால் சுரப்பு இல்லாமை**

குழந்தை பிறப்புக்குப் பிறகு ஓரிரு நாட்கள் சீம்பால் சுரப்பதோடு நின்று போய் பால் உற்பத்தியே இல்லாமல் குழந்தைக்கான புட்டிப்பால் தேடுவது என்பது அவல நிலையல்லவா? தாய்ப்பால்குடித்த தாய்க்கே பால் இல்லை என்றால், பிறந்தது முதல் புட்டிப்பால் குடித்து வளரும் பெண் குழந்தை வளர்ந்து தாயானவுடன் என்ன நடக்கும்?

தாயும் இருக்கிறாள், தனமும் இருக்கின்றன, பால் தான் இல்லை. சமுதாய விஞ்ஞானிகள் ஏன் மக்களை எச்சரிக்கவில்லை? மருத்துவத்துறை வேறு எதற்காகத் தான் இருக்கிறது? அநேக இளம் வயது பெண்களுக்கு தாய்ப்பால் இருப்பதில்லை என்பதை சமுதாயக் கோளாறாக ஏன் கணக்கில் எடுத்துக் கொள்ளவில்லை?

**5. மார்பகப் புற்று நோய்**

வளர்ச்சியில்லா நாற்றுப்பருவத்திலேயே பால் சுரப்பு நீரால் நச்சரிக்கப்பட்ட மார்பகத் திசுக்கள் செய்வதறியாது, தன் இயல்பு நிலை திரிந்து, வேறு விதத்தில் வளர்ச்சியைக் காட்டி மார்பகப் புற்றுநோய்களை வளர்த்து விடுகின்றன.

**6. கருப்பை, கர்ப்பப்பை கட்டிகள், புற்றுநோய்கள்**

அதே போன்று கருப்பை கர்ப்பப் பைகளில் இந்த ஹார்மோனின் தாக்கம் நமக்கே தெரியாத பல விளைவுகளை மாற்றங்களை ஏற்படுத்தி, மாறுபட்ட வெவ்வேற நிலைகளில் செயற்பட்டு, புற்று நோய்களை வளர்த்து மிகப் பெருங்கேடு விளைவிக்கிறது.

**7. ஆண்மைக்குறைவு, ஆண்மை இன்மை, முழுமலடு**

பெண் மக்கள் உடம்பில் ஏற்படும் மாற்றத்தைவிட இதே ஹார்மோனை உட்கொள்ளும் ஆண் மக்களின் பாடு அதைவிடத் திண்டாட்டம் தான். ஆண்



வீரியத்திற்கான நாளமில்லா சுரப்பு நீரை 5 வயது பிஞ்சுப் பையனுக்கு ஊசி மூலம் செலுத்தினால் என்ன ஆகும்? ஆணுக்கு, ஆண் ஹார்மோன் செலுத்தப்படுவதற்கே என்னென்னவோ ஆகக்கூடும் என்று கணிக்க முடிந்தவர்களுக்கு, பெண் ஹார்மோன் செலுத்தப்பட்டால் என்னென்ன விளைவுகளை ஏற்படுத்தும் என்பதை தெளிவு பெற முடியாதா என்ன?

ஆண்மைக்குறைவு, ஆண்மையின்மை, ஆண்மலடு உற்பத்தியாகி வளர்ந்து இன்று நாட்டில் 6 விழுக்காடு ஆண்மையில்லாதவர்கள் நடமாடிக் கொண்டிருக்கிறார்கள் என்ற உண்மையை கவலையோடு எண்ணிப் பார்க்க வேண்டும். இதனால் பாதிக்கப்பட்ட குடும்பங்களில் என்னென்ன விளைவுகளை ஏற்படுத்தி, மனிதர்களை சித்திரவதைக்கு உள்ளாக்கி, பைத்தியம் பிடிக்காத பைத்தியக்காரர்களாகவும், அலைய விட்டுக் கொண்டிருக்கும் அவல நிலைக்கு மூலகாரணம், இந்தவித பால் அருந்தியதுதான் என்பதை இன்னுமா ஏற்றுக்கொள்ளத் தயக்கம்? ஆண்களாகப் பிறந்தவர்கள் பெண் சாயலாக மாறுவதைக் காணவில்லையா? 40 வயதிற்குமேல் சில பெண்களுக்கு மீசை, தாடி முளைக்கிறதே! இது சமதாயக் கோணல் என்பதாக ஏன் எடுத்துக கொள்ளவில்லை.

**8. மறைமுகக் கோளாறுகள்**

நேர்முகமான ஆண்மையின்மை போன்ற பாதிப்பு ஒருபுறமிருந்தாலும், இன்று ஆண் மக்களுக்கு உடல்முடி குறைந்து வருவது; பெண்களுக்கு முடிகுறைவு, முடி அழகுக்குறைவு வழுக்கை அதிகரிப்பது கண்ணில் படவில்லையா? சொட்டை வழுக்கை அதிகரித்து வருவதும், ஹார்மோனின் தாக்கம்தான். ஆண்மைக்கு அழகு சேர்க்கும் அமைப்பெல்லாம் மாறிக் கொண்டு வருவது மனித சமுதாயத்திற்கு நல்லதல்ல.

பொதுவாக ஒன்றைப் புரிந்து கொள்ள வேண்டும். நம் உடலில் உள்ள நாளமில்லாச் சுரப்பிகளின் சீரான இயக்கத்தில் தான் நோயற்ற வாழ்க்கையின் சூட்சமம் அடங்கியிருக்கிறது. இயற்கையாகவே நாளமில்லாச் சுரப்பி நீர் ஒன்று அதிகரித்தாலே (தைராக்சின்), அல்லது குறைந்தாலோ (இன்சுலின்) எல்லாமே நோய்தான் என்கிற போது, நாமாக வலிந்து ஹார்மோனை தேடிக் குடித்துக் கொண்டிருப்பது அறிவார்ந்த செயலே அல்ல. அதற்கு "புரட்சி" என்ற பெயர் வேறு.

### 9. பாலுணர்வை மட்டுப்படுத்தி

பால் அருந்திய அன்று ஆண்மை வீறுகொண்டு எழுவது போலவும் விந்து நீர் அதிகமாவது போலவும் ஒரு மாயத்தோற்றம். ஆனால் உண்மை அதுவல்ல. நீண்டநாள் போக்கில் கவனிக்கும் போது, பாலுணர்வை மந்திக்கச் செய்வது. பால் அருந்திய அன்றைக்கு அல்லது அந்தக் காலகட்டத்திற்கு மட்டும் வீறு கொண்டிருந்து விட்டு, 30–35 வயதுக்குப் பிறகு எல்லாமே அடங்கிப்போய், ஆண்மையே இல்லாதிருத்தல் நல்லதா? அல்லது சராசரியாக பாலுணர்வு தொடர்ச்சியாக இருந்து கொண்டு நடுத்தர வயதையும் தாண்டி, வயோதிக நிலை வரை பாலுணர்வில் மேம்பட்டு விளங்குவது நல்லதா? எது சிறப்புடையது? அக்காலத்தில் நம் மூதாதையர்கள் 60 வயதுக்குப் பிறகும் திருமணம் முடித்து குழந்தை பெற்றவர்களின் வாழ்க்கை வரலாறு இந்த உண்மையைத் தெளிவாகக் காட்டவில்லையா? அறுபது அகவைக்குள்ளாகவே துவண்டு விடுவது தோல்வியடைந்த வாழ்க்கையாகாதா?

### 10. கொழுப்புக் குன்றாய் அசைந்தாட...

அதிலும் உடலுழைப்பு குறைந்து, கொழுப்பு சேர்ந்து வரும் இந்த நாளில் அரிசிச் சோறு சாப்பிட்டு வரும் பழக்கம் உள்ள தமிழ்நாட்டிற்கு, மேலும் மேலும் கொழுப்பு சேர, பால் அருந்த சிபாரிசு செய்வது தேவைதானா? எளிதாக செரிமானித்து தேவையான குளுக்கோஸ் பயன்பட்டது போக, மீதமுள்ள சர்க்கரை கொழுப்பாக மாற்றி இருப்பு வைத்துக்கொள்ள, அரிசி உணவே அளவுக்கு அதிகமாக உட்கொண்டு வருவது நம்முடைய நிலை. இதிலும் பாலும் குடிக்கச் சொல்வது நம்மை, கொழுப்புக் குன்றாக அசைந்தாடி நடக்க வைக்கும் தானே!

### 11. இரத்த அழுத்தம் மாரடைப்பு நோய்கள்

கொழுப்பு சேர்ந்து இரத்தக்குழாய் அடைபட்டு, இரத்த ஓட்டம் தடைபட்டு, அழுத்தம் அதிகமாகித் துன்புறுபவர்களுக்காகிலும் பால் அருந்துவதிலிருந்து விடுதலை கிடைக்கக் கூடாதா? மாரடைப்பு நோய்க்கான காரணங்களில் இரத்தக்குழாய் கொழுப்பு முக்கியக் காரணமாகும்.

### 12. பாலுடன் சேர்ந்த சீனி சர்க்கரை நஞ்சு

பால் அருந்துதலே வேண்டாதது என்கிற போது பாலுடன் சேர்ந்து அருந்தும் சீனி சர்க்கரை இன்னும் அதிகமான கொழுப்பைச் சேர்க்கிறது



என்று தெரிந்து கொள்ளவே இல்லை. சர்க்கரை நோய்க்காரர்கள் சர்க்கரை போடாத டீ. காபி சாப்பிடுகிறார்களேயன்றி, பாலை நிறுத்துவதில்லை. பாலின் மீது அத்தனை மோகம், சர்க்கரை நோய் வந்து விட்டால் சர்க்கரையைத் தவிர்த்துக் கொள்பவர்கள், இரத்த அழுத்தக்காரர்கள் பாலைத் தவிர்த்துக் கொள்வதில்லை. சூடான பானத்தின் மீது அத்தனைக் கவர்ச்சி, நாடி நரம்புகளில் ஓடிப்பாயும் நச்சுப்பொருளை, இப்படி எத்தனை நாட்களுக்கு விட்டுக் கொண்டிருக்கப் போகிறோம்? எப்படி இதிலிருந்து தப்பிக்கப் போகிறோம்?

அயல் இனப் பசுக்களின் பாலென்ன – நம் நாட்டுப் பசும்பாலிலும் இதே ஹார்மோனும் இருக்கிறது தானே! அதுமட்டும் நஞ்சில்லையா? என்ற வினா எழும்பும். நம் நாட்டில் ஒரு பழமொழி இருக்கிறது. **மூன்று படிக்கும் மேலேயும் வேண்டாம்; மூக்கணாங்கயிறு போடவும் வேண்டாம்** நம் நாட்டு பசுக்களாக இருந்தாலும் மூன்று படிக்கும், அதாவது 6 லிட்டருக்கு மேல் பால் கறக்கும் பசுக்கள் தேவையில்லை என்பதே இதன் பொருள்.

ஒரு நாளைக்கு 6 லிட்டர் என்றால் ஒரு வேளைக்கு 3 லிட்டர் இதில் கலந்து வரும் நாளமில்லாச் சுரப்பு நீர் மிக மிகக் குறைவு.

இந்தக் குறைந்த அளவினதாக இருந்தாலும் பலவித மாற்றங்களுக்குப் பிறகு ஜீரணிக்கப்பட்டாலும் அதன் நச்சுத் தன்மையை மாற்றி விடும் வல்லமை கல்லீரலுக்கு உண்டு. கல்லீரல் தானே நஞ்சு முறிப்பியாக வேலை செய்து நம்மை காப்பாற்றி வருகிறது. பால் மூலம் சேர்ந்த நச்சுப் பொருள் உடல் வளத்தை தாக்காமல் நோய் நொடியிலிருந்து பாதுகாத்து வந்துள்ளது; வருகிறது. 6 லிட்டருக்கு மேல் பால் கறக்கும் திறனுள்ள நம் நாட்டுப் பசுக்களே வேண்டாம் என்கிற போது அயல்நாட்டுப் பசுக்களின் இறக்குமதி தேவைதானா?

அப்படியானால் பால் உற்பத்தி பெருக வேண்டும் என்று திட்டமிட்டவர்கள் நம் நாட்டிலேயே உள்ள பசுக்களில் அதிகமாகப் பால் கறக்கும் பசுக்களாகத் தேர்ந்தெடுத்து அதிலிருந்து பெறப்பட்ட காளைகளை பொலிவுக்கு வளர்த்து, அதன் மூலம் பால்மாடு சந்ததிகளைப் பெருக்கியிருக்க முடியும். ½ –1 லிட்டர் அளவுக்குத்தான் பால் கொடுக்கும் திறன் படைத்தது என்றாலும், இவற்றையும் அழிந்து போக விட்டு விடாமல், உழவுக்கான காளைகள் உற்பத்திக்காக விட்டிருக்க வேண்டும்.

சுருக்கமாகச் சொன்னால்,

1. பால், மனிதருக்கான இயற்கை உணவல்ல.
2. பால், புற்று நோய் ஊக்கி.
3. பால், பாலுணர்வை மட்டுப்படுத்தக் கூடியது.
4. பால், குறைந்த வயதிலேயே பருவமடையச் செய்து விடுகிறது.
5. பால், இளவயதிலேயே விலக்கு நின்றுபோகத் துணை புரிகிறது.
6. நோய் எதிர்ப்பு சக்தியை குறைத்து விடுகிறது.
7. இதயத்திற்கு மிகப் பெரிய எதிரி.
8. கல்லீரல், சிறுநீரகங்களில் கல் உற்பத்தி செய்கிறது.
9. முதுகுத் தண்டு வலி, குதிகால் வலி, முழங்கால் மூட்டு வலிக்கான மூலகாரணமாக இருக்கிறது.
10. மூளைச்சோர்வு, ஞாபக மறதி, கண்பார்வை மந்தித்தல், மாரடைப்பு, வாயு தொந்தரவு, மூலம், மலச்சிக்கல் போன்ற பல சிக்கல்களுக்குரிய மூல கர்த்தாவாகிறது.
11. வயிற்றில் அமில நிலையை அதிகரிக்கச் செய்கிறது. இந்த அமில நிலை எலும்புத் தேய்மானத்திற்கு அடிப்படை காரணமாகிறது.
12. ஹார்மோனின் சமநிலையை திரித்து மாற்றி, வளர்சிதை மாற்றத்தைக் கொடுத்து, நீண்ட நாள் நோயாக மனிதர்களை நின்று கொல்கிறது.
13. பால் ஓர் அமைதியாக கொல்லும் நஞ்சு.

எப்படிப் பார்த்தாலும் பால் மனிதருக்கான இயற்கை உணவு அல்லவே அல்ல.



# 8. சூரிய சக்தியை துண்டித்துக் கொள்ளல்

மனிதன் சராசரி ஆண்டொன்றுக்கு 2 கிலோ இரசாயன உரம், பூச்சிக்கொல்லி, களைக்கொல்லி மருந்துகளை உட்கொண்டு வருகிறான். இவற்றைச் செரித்து நஞ்சற்றதாக ஆக்கி, வெளியில் தள்ளுவதற்கே நம் ஈரலும், நுரையீரலும், சிறுநீரகமும் செயலிழந்து போய்விடுகின்றன. ஒவ்வொருவருடைய சிறுநீரகமும், கல்லீரலும இப்போதைய நிலையில் மூன்று மனிதர்களுக்கான வேலையைச் செய்து தாக்குப் பிடித்துக் கொண்டு இருக்கின்றன. அதாவது ஒவ்வொரு உறுப்பும் அதற்கான இயற்கையான செயல்பாட்டை விட மூன்று மடங்கு அதிகமாக வேலை செய்து தாக்குப் பிடித்துக் கொண்டு வருகின்றன என்று பொருள். இதில் நாளமில்லா சுரப்பு நீர்களின் சமன்பாட்டு அளவும், நாம் உட்கொள்ளும் பாலின் மூலன் பாதிக்கப்பட்டால், நம் உள்ளுறுப்புக்கள் எப்படி எத்தனை காலத்திற்கு நோய் நொடி இல்லாமல் இயங்கும்?

நாம் அறியாமலேயே, நம் இயற்கை இயக்கத்திற்கு மிகப் பெரிய அளவில் உதவி செய்து வருவது சூரிய ஒளியில் உள்ள சிவப்புக்கதிர் (IRR) கற்றைகளே! சூரிய ஒளி பயன்பாடு பற்றி சற்று விளக்கமாக தெரிந்த கொள்வது நல்லது.

அந்நிய இன கால்நடைகளால் நேரடி பாதிப்பும் உண்டு. அதற்கு ஈடான அளவில் மறைமுக பாதிப்பும் உண்டு. குளிர் நாடுகளில் சூரிய ஒளிக்கதிர் பூமிக்கு வருவதே குறைவு. அதனால் சூரிய ஒளியை கிரகிக்கும் நீண்ட கொம்புகள் போய்விட்டன. நம் நாட்டில் சூரிய ஒளி அதிகம். அதனால் சூரிய ஒளியைக் கிரகிக்கும் நீண்ட கொம்புகள் நம் கால்நடைகளுக்கு உண்டு. வானவில் தெரியக்கூடிய காலை 8 மணிக்கு முன்னதாகவும் மாலை 4 மணிக்கு பின்னரும் உள்ள சூரிய ஒளியில் உள்ள **சிவப்புக்கதிர்கள்** மாடுகளின் கொம்பின் வழியே கிரகிக்கப்பட்டு, வைட்டமின் 'டி' யை உற்பத்தி செய்து கொள்கிறது. ஆக மாடுகளின் கொம்புகள் சூரிய ஒளியை ஈர்த்துக் கொள்ளும் **ஆன்டெனா**. வைட்டமின் 'டி' இருந்தால் தான் பாஸ்பரசிலிருந்து பாஸ்பேட் தயாரித்துக் கொள்ள முடியும். பாஸ்பேட் இருந்தால் தான் உண்ணும் உணவில் உள்ள கால்சியம் கிரகித்துக் கொள்ள முடியும். அப்போது தான் கால்சியம் பாஸ்பேட் தயாரித்துக் கொண்டு நம் எலும்புகள் உறுதிப்படும்.

கொம்புகள் வழியே கிரகிக்கப்பட்ட சூரிய ஒளி உயிர்ம்ம இரசாயன மாற்றமடைந்து மாட்டின் குளம்புகள் வழியே பூமிக்குள் செலுத்தப்படுகிறது. நிலமும் வளமையோடு பயிர் விளைவித்துக் கொடுக்கின்றன. உழவின் போது லாடத்தை கழற்றிய பிறகு உழவு செய்வது நம் முன்னோர்கள் கடைபிடித்து வந்திருக்கிறார்களே!

ஆக நம் கால்நடைகள் எந்த அளவிற்கு அதிகமாக விளைநில மண்ணில் இறக்கப்பட்டு நடக்கின்றனவோ, அந்த அளவுக்கு விளைச்சல் பெருகியிருந்தது. இந்தவித இயற்கையான உயிர்ம்ம சத்து டிராக்டர் உழவில் எப்படி கிடைக்கும்? இந்த நோக்கத்திற்காகத்தான் பல ஊர் மாடுகள் ஒரே நாளில் ஒரு ஊரில் கூடும்படியான எல்கைப் பந்தயம், ரேக்ளா ஓட்டம், கம்மாக்கரைப் பந்தயம், மஞ்சுவிரட்டு, மாடுபிடி விளையாட்டு என்று முன்னோர்கள் விழாக்களை ஏற்படுத்தி, கால் குளம்புகள் மண்ணில் மிதிபட வாய்ப்புகள் ஏற்படுத்திக் கொண்டாடினார்கள். நம் பாரம்பரிய சூரியப் பொங்கல், சூரிய சக்தியை முதன்மை படுத்தியும், அதனைக் கிரகித்து, பூமிக்குள் செலுத்தி நில வளத்தை ஊட்டுவதால், மாட்டுப் பொங்கல் கொண்டாடி கால்நடைகளுக்கு இரண்டாம் இட முக்கியத்துவமும் கொடுத்து, இயற்கையின் நுட்பமறிந்து வாழ்ந்தார்கள் நம் முன்னோர்கள். உலகிலேயே சூரியனுக்கும், மாடுகளுக்கும் விழா எடுப்பது தமிழ்நாட்டில் மட்டும் தான் என்பதை எண்ணிப் பெருமைப் படுகிறோம்.

**அதிர ஓடினால் முதிர விளையும்** என்ற பழமொழியும் இதன் அடிப்படையில் அமைந்ததுதான். சூரிய சக்தியை நிலத்திற்கான உயிர் சக்தியாக மாற்றிக் கொடுப்பது கால் நடைகள் தான் என்பது அப்பட்டமான உண்மை.

**சூரியனை மறந்து உயிர்கள் வாழ்ந்திட முடியாது என்பது எப்படி உண்மையான உண்மையோ, அப்படி கால்நடைகளை மறந்து இயற்கை வாழ்க்கை வாழ்ந்திட முடியாது என்பதும் உண்மையான உண்மையே!**

மாட்டின் கொம்புகள் சூரிய ஒளியைக் கிரகிப்பது போலவே, மனிதனும் சூரிய ஒளியை கிரகித்துக் கொள்ளத் தான், தலைமுடி கருமையாக இருக்கிறது. **மாட்டின் கொம்பு கூறு, மனிதனின் கொம்பு மயிறு** என்ற பழமொழியும் இதன் அடிப்படையில் அமைந்தது தான். கொம்பின் எலும்பு வளைய முடியாது என்பதாகப் புரிந்து கொண்டால் போதும். சூரிய ஒளியை



மனிதன் கிரகித்துக் கொண்டே இருக்க வேண்டும் என்பதனால் தான் எவ்வளவு மழித்தாலும் முடிவளர்ந்து கொண்டே இருக்கிறது.

பிறந்த குழந்தைகளுக்குச் சூரிய ஒளிக்கதிர் நேரடியாக மூளையில் கிரகிக்கப்பட வேண்டும் என்பதற்காகத் தான் தலையின் உச்சிக் குழி எலும்பு மூடாமல் வெறும் தோலாக மூடியிருக்கிறது. அதனால் தான் கிராமப் புறங்களில் பிறந்த பச்சிளங் குழந்தையினை காலை வெய்யிலில் முக்கியமாக தலைபாகம் சூரிய ஒளியில் படுவது போல, சூரியக் குளியல் நடத்திக் கொண்டார்கள். காலை வெய்யல் பட வாய்ப்பு இல்லாதவர்கள் மாலை வெய்யலை பயன்படுத்திக் கொண்டார்கள். **காலை வெய்யில் கறந்த பாலுக்குச் சமம், மாலை வெய்யில் மருந்துக்குச் சமம்** என்ற பழமொழியும் இதன் அடிப்படையில் ஏற்பட்டதே! (காலை வெய்யில் கறந்த பாலுக்குச் சமம் என்று கூறுவது பால் சத்து மிகுந்த திரவ உணவு என்ற நேர் பொருளில். அமில நிலைக்கு முன்னைய நிலை என்பதால்).

பல்லாண்டுகளாகக் கோமாவில் மூச்சு விட்டுக் கொண்டிருந்தவர் சூரிய ஒளிக்குளியல் சில நாட்கள் தொடர்ந்த பிறகு உடல்நிலை தேறி, மீண்டும் உயிர்ப்பித்து எழுந்து நடமாடிய அற்புத நிகழ்வுகளை அவ்வப்போது செய்திகளில் திரைப்படங்களில் பார்க்கத்தானே செய்கிறோம்!

பெண்களுக்கான உள்ளாடை, உள் கச்சை முதலானவை சிவப்புக் கதிர்கள் தடுக்கப்படாமல் உடலில் பாய அனுமதிக்கும் தன்மை கொண்டதாக விளம்பரப்படுத்தப் படுவதும் சூரியக் கதிரின் முக்கியத்துவம் உணரப் பெற்றதால் தானே!

கொம்புகள் உள்ள நம் நாட்டுப் பசுக்களின் பாலையும், கொம்பில்லாத அயல் இனப் பசுக்களின் பாலையும் கலப்படமில்லாமல் கறந்தவுடன் குடித்துப் பார்த்தவர்களுக்கு நம் பசுக்களின் பாலின் அடர்த்தி, சுவையின் தன்மையையும் அயல் இனப் பசுக்களின் நீர்த்த தன்மையும், ருசியில் மாறுபாடும் தெளிவாகத் தெரிந்து கொள்ள முடியும்.

இன்னொன்றும் முக்கியமாகக் கவனத்தில் எடுத்துக் கொள்ள வேண்டும். பசுக்கள் சூரிய ஒளிபடக் கூடிய முறையில், காலையிலும் மாலையிலும் அல்லது முடிந்த அளவு வெய்யிலில் சுற்றிவர அனுமதிக்க வேண்டும். வெய்யலே படாமல் வளர்க்கப்படும் பசுக்களுக்கு கால்சியம் சத்துக் குறைவால் ஏற்படும் பால் காய்ச்சல் என்ற ஜன்னி நோய் ஏற்படுவது போல, வெய்யலில் சுற்றித்திரியும் பசுக்களுக்கு பால்காய்ச்சல் வருவதில்லை.

மனிதரில் கூட வெறும் கோவணம் மட்டும் கட்டிக் கொண்டு நாள் முழுவதும் வெய்யலில் நின்றபடி வேலை செய்யும் விவசாயத் தொழிலாளிக்கு கால்சியம் பற்றாக்குறை (சர்க்கரை நோய் உட்பட) நோய் வருவதில்லை. ஆனால் செயற்கை இழைகளால் தயாரிக்கப்பட்ட துணிகளால் செய்த ஆடைகள் அணிந்தவர்களுக்கு சூரியக் கதிரொளியை உடலுக்குள் புகவிடாமல் தடுத்து நிறுத்தி விடுவதால், கால்சியம் பற்றாக்குறை நோய் தாக்கம் அதிகம் ஏற்பட்டு விடுகிறது. அதனால் தான் வாழ்க்கையின் தத்துவமாக **சூரியனை மறக்காதே, சுறுசுறுப்பை இழக்காதே** என்று பழமொழி ஏற்பட்டுள்ளது.

இந்த ரகசியத்தை தெரிந்து கொண்டதால் தான் அயல் நாட்டுக்காரர்கள் சூரிய ஒளிக்குளியல் முறையை வாரம் அல்லது மாதம் ஒரு முறையாகிலும் கடைபிடித்து வருகிறார்கள். நம் நாட்டில் தான் சூரிய ஒளி பட்டுவிடக் கூடாதே என்று கவலைப்பட்டு குடைபிடித்துச் செல்கிறவர்கள் இருக்கிறார்கள். சூரியக் கதிர் வீச்சிலிருந்தே துண்டித்துக் கொள்கிறார்கள்! என்ன தலைகீழ் நிலை! வேதனை தான்போ!

நம் நாட்டு தட்ப வெப்ப நிலைக்கும், சூரிய ஒளி வளத்திற்கும் கால்சியம் பற்றாக்குறை நோயே வரக்கூடாது. ஆனாலும் வருகிறது. **சூரிய அறுவடை** ஒவ்வொரு வரும் செய்து கொள்ள முழு உரிமை இருந்தும், பயன்படுத்திக் கொள்ளாதது நம்முடைய அறியாத்தனம் தானே! கொம்பில்லாத அல்லது குட்டைக் கொம்புள்ள பசு இனங்களைத் தருவித்து, அறியாமல் ஆராயாமல் செய்துவிட்டத் தவறு. இத்தோடு நின்றோமா! கொம்பின் பயனை அறியாமல் பிறந்த கன்றுகளின் கொம்புகளையும் வளர விடாமல் தீய்த்து மாய்த்து மொட்டை மாடுகளாக உருமாற்றம் செய்து கொண்டோம். என்ன புதுமையின் (!) ஆர்வமோ போ! அந்நியம் மீது அத்தனை கண்மூடித்தனமான கவர்ச்சி.



# 9. பால் படுத்தும் பாடு

இன்றைய நிலையில் பெரும்பாலான நோய்கள் அன்றாடம் சேர்த்துக் கொள்ளும் பாலினால் வருகிறது என்பதை மக்கள் இன்னும் பரவலாகத் தெரிந்து கொள்ளவில்லை. கறந்த உடன் கிடைக்கும் புத்தம் புதிய கறந்த பால், கறந்த சூடு ஆறுவதற்குள் தீராத நோய் நொடிக்காரர்களுக்கும், நோஞ்சான் குழந்தைகளுக்கும் சத்து மிக்க உணவாக, இயற்கை நுட்பம் புரிந்து கொடுத்து வந்திருக்கிறார்கள் முன்னோர்கள். நம் வீட்டில் வளர்த்து தேவையான அளவு கறந்து, உடனடியாகப் பயன்படுத்தி வரும்போது பால் எந்தத் தீங்கும் செய்வதில்லை.

பால் கறந்த பிறகு நேரம் ஆக ஆக, காரத்தன்மை மாறி அமிலத்தன்மைக்கு திரிந்து, தீய விளைவு ஏற்படுத்தும நிலைக்கு தள்ளப்பட்டு விடுகிறது. பலமணி நேரம் கடந்த பிறகு காய்ச்சப்படும் பால் திரிந்து கெட்டு விடுவதற்கு காரணம் இதுதான். ஈரோட்டில் சேகரித்த பால் சென்னை செல்வதற்குள், எத்தனை லாரி பால் கெட்டுத் திரிந்து போயிருக்கிறது! பாலாகப் பயன்படுத்த முடியாமல் நெய் எடுத்துத்தானே பயன்படுத்தி இருககிறார்கள்! இந்த நிலையில் ஆந்திராவிலிருந்து பால், அயல் நாட்டிலிருந்து பால்பொடி இறக்குமதி இதெல்லாம் தேவை தானா?

அமில நிலைக்குத் தள்ளப்பட்ட பால், வயிற்றுக்குள் அமில நிலையை அதிகரித்து, புளிப்பு ஏற்பட்டு, செரிமானக் கோளாறு ஏற்படுத்தி, வயிறு மந்தித்து, பசி மறந்து குழந்தைகளுக்கு மாந்தம் ஏற்படுத்தி நமட்டுத்தனமான வயிற்று வலி ஏற்பட்டு, பெரும் அவஸ்தைப்பட வைப்பதே இந்தவித பழைய பால்தான். வயிற்றில் ஏற்பட்ட புளிப்பு ரத்தத்தில் கலந்து ரத்தத்தையும் இயற்கைக்கு மாறான அமில நிலைக்கு தள்ளி விடுகிறது. புளிபோட்டு பித்தளை, வெங்கலம், செப்பு பாத்திரம் துலக்கும் போது புளியில் உள்ள அமிலம் உலோகத்தை தேய்த்து பளபளபாக்குதல் போல ரத்தத்தில் ஓடும் அமிலம் நம் எலும்பை அரித்து தேய்த்து விடுகிறது. எந்தப் பகுதியில் மூட்டுகள் அதிக உரசலுடன் வேலை செய்கிறதோ (முழங்கால், கழுத்து) அந்த இடத்தில் அதிகமாகத் தேய்ந்து விடுவதால் மூட்டுவலி உண்டாகி விடுகிறது. மூட்டு வலிக்கு உள்ளானவர்கள் சிகிச்சை பெறும் போது, மருத்துவர்களால் கால்சியம் குறைந்து விட்டதால் தான் இத்தேய்மானம்; கால்சியம் அதிகம் இருக்கக் கூடிய கீரை, தயிர், பால் அதிகம் சேர்த்து வரும்படி ஆலோசனை

சொல்லப்படுகிறார்கள். மேலும், மேலும் பால் சாப்பிட சாப்பிடத் தேய்மானம் அதிகரித்துக் கொண்டு சென்று எலும்புகள் உறுதி இழந்து எளிதில் உடைந்து விடும் நிலைக்குத் தள்ளப்பட்டு விடுகிறது. சின்னஞ்சிறு சறுக்கலில் இடறி தடுமாறி, விழுந்து விட்டால் கூட எலும்பு முறிவு ஏற்பட்டு விடுகிறது. ரத்தத்தில் ஓடும் அமில நிலையானது ஏற்கனவே உடலில் எலும்பில் இருக்கும் கால்சியம் சத்தையும் வெளியில் எடுத்து தள்ளி விடுகிறது. ஆக மூட்டு வலிக்காரர்கள் பால் சாப்பிடுவதை அறவே நிறுத்தினாலே நல்ல குணம் தெரியும். இன்னுமொன்று, கால்சியம் பற்றாக்குறை போக்க கால்சியம் அதிகமுள்ள உணவு சேர்ப்பது மட்டும் போதாது. பாஸ்பரசும் அதற்கான விகிதத்தில் இருக்க வேண்டும். கால்சியமும் பாஸ்பரசும் ஒன்றுக்கு இரண்டு மடங்கு அல்லது குறைந்த அளவு 5 : 6 என்ற விகிதத்தில் இருப்பது அவசியம். நல்ல முறையில் கிரகிக்கவும், அதற்கான ரசாயன மாற்றங்களுக்கு வைட்டமின் 'டி' யும் கட்டாயம் வேண்டும். வைட்டமின் டி சூரிய ஒளி மூலம் தான் உடலில் உற்பத்தி செய்து கொள்ள முடியும். ஆக எலும்புத் தேய்மானம் போக்க, அடிப்படை சிகிச்சையின் ஆணிவேரே சூரிய ஒளியில் தான் இருக்கிறது. இப்படியும் சொல்லலாம். யார் சூரியனை பகைத்து, தப்பித்து, ஒளிந்து, உடலில் பட்டு விடாதபடி மறைத்துக் கொள்கிறார்களோ, அப்படிப் பட்டவர்களுக்குத் தான் கால்சியம் பற்றாமை, எலும்புத் தேய்மானம், மூட்டுவலித் தொல்லை ஏற்படுகின்றன. சூரியன் என்றாலே எலும்பு என்று வைத்துக் கொள்ளலாம்.

இந்தச் சின்னஞ்சிறு உண்மையை மக்களுக்கு தெளிவாகச் சொல்லிக் கொடுத்து, முழங்கால் மூட்டுவலி, கழுத்து வலி போன்ற நோய் நொடிகளிலிருந்து காப்பாற்றி, மகிழ்ச்சிகரமான வாழ்க்கையை மக்கட் களிப்பதும், மனித வளம் மேம்பாடு குறித்து, வழிநடத்திச் செல்லும் அரசின் தலையாய கடமை என்று எதிர்பார்ப்பது சரி தானே!

பொதுவாக மூட்டுவலி, குளிர் நாடுகளில் தான் குறிப்பாகப் பெண் மக்கட்குத்தான் பெருமளவில் தாக்குதல் கொடுக்கும். ஆனால் இத்தனை சூரிய ஒளி நிரம்பிய நம் நாட்டிலும் மூட்டுவலி நோய் இருக்கிறதென்றால் இது இயற்கையின் வஞ்சனையல்ல. மனிதனின் புரியாமைதான் காரணம்.

அப்படியானால் புளிப்பு நிலைக்கு (அமில நிலைக்கு) பால், தயிர் தாவுவதற்குள் பயன்படுத்தி விட வேண்டும் என்பது பொருள். காய்ச்சி,



முதல்நாளே இரவில் பிறையூட்டப்பட்ட பால் மறுநாள், பகல் உணவுக்கு மட்டுமே பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்பது பொருள், கறந்தவுடனேயே பாலைப் பயன்படுத்தி விட வேண்டும் என்பது பொருள்.

இரவு நேரப் பயன்பாட்டிற்கும், நாள் முழுவதும் நீர்பானமாகக் கொடுக்கவும், மோர் மட்டுமே போதுமானது. மோரில் உள்ள அமில நிலை அதிகமல்ல. நீர்க்கச் செய்து, உடல் சராசரியாக ஏற்றுக் கொள்ளக் கூடியதே! தயிர் என்பது உணவு. மோர் என்பது மருந்து.

தயிர் புளிப்பு ஏற்படுவதற்குள் சாப்பிட்டுப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்ற பொருளில் தான் பாரதிதாசன், **'கீரை, தயிர் இரண்டும் கேடு செய்யும் இரவில்'** என்று குடும்ப விளக்கில் பாடினான்.

உலக ஜீவன்களில் மனிதன் மட்டுமே அமில நிலை நோயால் அவதிப்படுகிறான். பால் குடித்து வளரும் அனைத்து உயிர்களும் பாலை அப்படியே தாயிடம் குடித்துக் கொள்கின்றன. நேரடியாகத் தாயிடமிருந்து குடிக்கப்பட்ட பாலினை தயிராக உறையச் செய்யும் ரெனின் குழந்தையின் வயிற்றில் நிறைந்திருப்பதால், உறைந்து செரிமானித்து கிரகிக்கப்பட்டு விடுகின்றது. பால் நேரடியாக அப்படியே செரிமானிக்கப் படுவதில்லை. தேநீருடன், காபியுடன் அல்லது பாலாகவும் எடுத்துக் கொள்ளப்பட்டாலும், செரிமான நிலைக்கு மாற்றப்பட்ட பிறகு தான் செரிக்கப்படுகிறது. ஏற்கனவே பழைய பாலில் உள்ள அமில நிலையும், தயிராக மாற்ற வயிற்றில் உற்பத்தியாகும் அமிலமும் (ஹைட்ரோ குளோரிக்) சேர்ந்து முழு வயிறும் அமில நிலைக்குத் தள்ளப்படுவதால் பல்வேறு நோய்களுக்கு ஆளாகிறான் பகுத்தறிவு பெற்ற மனிதன் ( ! )

அதனால் தான் எங்கு நோக்கினும் அமில நிலை தொந்திரவு என்கிற வாதை நிறைந்திருக்கிறது.

இயற்கையாக, பாலில் குழந்தையை வளரச் செய்யும் "வளர்ச்சி ஹார்மோன்" இருக்கிறது. முழு வளர்ச்சி பெற்ற மனிதனுக்கு எதற்காக "வளர்ச்சியூட்டும் ஹார்மோன்".

மாடுகள் 1 வருடத்திற்குள் மிக விரைவாக முழு வளர்ச்சி அடைந்து விடும். ஆனால் மனிதன் 24 வயது வரை வளர்ச்சி பெறுகிறான். அத்தனை விரைவாக வளர்ச்சி கூட்டும் ஹார்மோன் மனிதனுக்கு எதற்கு?

அப்படியே பால் சாப்பிட்டு வாழ வேண்டிய விதிவிலக்கான நிலை ஏற்பட்டாலும் சர்க்கரை சேர்க்காமல் வெறும் பால் மட்டுமே அருந்த வேண்டும்.

மனிதன் எடுத்துக் கொள்ள வேண்டிய உணவில் காரம் அமிலம் 80 : 20 என்கிற விதத்தில் தான் இருக்க வேண்டும். ஆனால் பால் அருந்தலால் நேர் தலைகீழாக மாறி 20 : 80 என்ற விகிதத்தில் அமைந்து, மனிதர்களை நோயாளிகளாக ஆக்குகின்றது.

அதனால் தான் பாலும், பால் பொருட்களும் மனிதருக்கான இயற்கை உணவே அல்ல என்பதும், நோய் நொடியை கொடுக்க வல்லது என்பதும், வலியுறுத்த நேரிடுகிறது. பாலைத் தவிர்த்தலே பல நோய்களின் தாக்கத்திலிருந்து விடுதலை பெற்று விடலாம் என்பதை அழுத்தம் கொடுத்துச் சொல்ல வேண்டியிருக்கிறது.



# 10. பைத்தியத்திற்கான மருத்துவம்

பால் கொடுப்பதால் தான் பசுக்கள் மீது இவ்வளவு அக்கறை. பாதுகாக்க சட்டமும், இன்ன பிறவும். பசுக்களை தெய்வமாகக் கொண்டாடுவதெல்லாம் அது கொடுக்கும் பால், தயிர், வெண்ணெய், நெய்க்காகத்தான். உலகமே பட்டினி போட்டாலும், படியளந்த, பராமரித்த மன்னர்களே பட்டினி போட்டாலும், ஒரு கறவை மாடு இருந்து விட்டால் பஞ்சம் பட்டினியிலிருந்து காப்பாற்றிக் கொள்ளலாம் என்பதை நன்குணர்ந்து தான், பசுக்களுக்கு மகத்துவம் சூட்டப்பட்டு தெய்வ வடிவங்களாக ஆக்கப்பட்டு, புனிதப் போர்வை போர்த்தப்பட்டது.

இப்போதைய நிலையில் பால் பற்றிய உண்மை நிலை புரிந்து விட்டால் நிலைமை மாறினாலும் மாறக்கூடும். பாலினை அளவுக்கு மீறிப் பயன்படுத்தி, தொல்லைகளுக்குள் மாட்டிக் கொண்டது தான் தவறு. முறையோடு அளவோடு பயன் படுத்தினால் நம் நாட்டுப் பசு கொடுக்கும் பொருட்கள் அனைத்தும் மருத்துவக் குணங்கள் கொண்டவைகள்.

பசு, மருத்துவக் குணங்கள் கொண்ட பொருட்களை உற்பத்தி செய்து கொடுக்கும் "**நாற்றங்கால்**". இயற்கை மருந்துகளை பெருக்கிக் கொடுக்கும் உயிர் ஜீவன். பக்க விளைவோ, ஒவ்வாமையோ வேறு எந்த விதமான தேவையில்லாத எதிர் விளைவோ உண்டாக்காத மருந்துகளை விளைவித்துக் கொடுக்கும் "பசு" மையான "விளை நிலம்".

மகரந்தப் பொடிகளும் உணவுப் பொருட்களும் செயற்கை மருந்துகளும் சில செடி, கொடி, பூக்களும் கூட ஒவ்வாமையை ஏற்படுத்துகின்றன. ஆனால் பால், தயிர் அடங்கிய பால் பொருட்கள் ஒவ்வாமையை ஏற்படுத்துவதாக வரலாறு உண்டா? ஆகவே தான் பசுக்களை மனிதன் தொழுது ஏற்று, பக்கத்தில் வைத்து பராமரித்து இருக்கிறான்.

எந்த நோய் வந்தாலும் மருந்து தேடி எங்கெங்கோ அலைய வேண்டியதில்லை. நம் பசுக்கள் கொடுக்கும் பொருட்கள், நோய்களுக்கான சிகிச்சைப் பொருளை தயாரித்துக் கொடுக்கும் "தொழிற்சாலை" என்பதை நினைவில் நிறுத்த வேண்டும். வந்த நோயை போக்க வேண்டும். வராத நோயை தடுக்க வேண்டும். அதாவது அனைத்து வித நோய்களுக்கும் எதிர்ப்பு சக்தியை கொடுக்க வேண்டும் என்று பொருள். அவ்வளவு தானே! இது போதாதா நோயற்ற வாழ்க்கைக்கு; குறைவற்ற செல்வத்திற்கு.

அதனைச் செய்வது பசுவிடமிருந்து தயாரிக்கும் பஞ்ச கவ்வியா! பஞ்சகவ்வியா என்றால் பசு கொடுக்கும் ஐந்து விதப் பொருட்கள் என்பதாக தற்காலத்தில் பொருள் சொல்லப்படுகிறது. உண்மை அதுவல்ல. "பஞ்சம்" என்றால் பற்றாமை, போதாமை, இல்லாமை. "கவ்வியா" என்றால் அழித்தல் "கவ்வுக்கை நெகிழாமல்" என்ற சிலப்பதிகாரத் தொடர் போல, நாய் கவ்வுதல், என்று குறிப்பிடுவத போலக் கவ்வுதல், பற்றி அழித்தல், பஞ்சத்தைப் பற்றாமையை பற்றி அழித்து விடுதல் என்று பொருள். சத்து பற்றாமை நோயை, பற்றி அழித்து விடுதல் என்பதான பஞ்சகவ்வியா! இது தமிழ்ச் சொல், தமிழ் மருந்தின் பெயர். சர்வ வல்லமை படைத்த அருமை மிகு மருந்து "அமுதம்" (அமுதம் – அமிர்தமாகி விடவில்லையா அதுபோல).

"நூலான பஞ்ச கவ்விய கிருதம் சொல்வேன்
நுண் மையாயி ஆவினுடைய சாணிநீரு
சேலாகவே நாழிகோவின் நீரு சிறப்பாகவே
படிரண்டு பால் ரெட்டி
மேலான தயிர் வெள்ளம் படியீரஞ்சி
மேவும் நெய் இருநான்கு சேரு
வேலான ஏலமோடு முத்தம் ரோகிணி
விளங்கும் கொடு வேலியோடு மதுரம் மஞ்சள்
மஞ்சான திற்பிலியும் பாடை மூலம்
மரமஞ்சள் மஞ்சட்டி தோடை வேரு
துஞ்சாத வல்லாரை வயலின் முத்தம் துடரும்
விழால் வசம்புடனே இவைகள் சேர்!
மிஞ்சாமலே வகைக்கு களஞ்சி ஆறு
மேவியரைத் தொன்றாகக் கலந்து கொண்டு
கெஞ்சடித்தே கரண்டியள வாயுண்ணு
கெடுதி செய்யா அறள் கிரிசம் அகலுமதோடே"

பசுவின் சாணம் கெட்டியாகக் கரைத்தது 1.3 லிட்டர், பசுவின் மூத்திரம் 2 படி, பசும்பால் 4 படி, தயிர் 10 படி, நெய் 8 படி இவைகளோடு ஏலம், கடுகு, கொடுவேலி, மதுரம், மஞ்சள், திப்பிலி படை கிழங்கு, மரமஞ்சள்,



மஞ்சட்டி, ஆடு தொடா செடிவேர், வல்லாரை, அவுரி, வசம்பு ஆகியவற்றை வகைக்கு 30 கிராம் சேர்த்து பசும்பால் விட்டு அரைத்து ஒன்றாகக் கலக்கி, நொதிப்பு அடங்கிய பின்னர் (இப்போது கூறும் 22 நாட்கள்) நல்ல பருவத்தில் வடித்தெடுத்து தினமும் கரண்டியளவு உண்டு வர பைத்தியம் தீர்ந்து விடும் என்பதான மருத்துவச் செல்வத்தை அகத்தியர் கொடுத்திருப்பதைக் காணும் போது, பசுக்கள் பராமரிப்பின் அவசியம் புரிந்து கொள்ள முடிகிறது.

இம் மருந்தை, இன்ன நோய் என்று குறிப்பிட்டுச் சொல்ல முடியாமல் பசியில்லாமல் இளைத்து உடல் ஒடுங்கிய நோயாளிகளுக்குக் கொடுத்துச் சோதித்தாயிற்று. எலும்புருக்கி நோய்க்காரர்களுக்கும் ரத்த சோகை, பக்கவாதம், காக்காய் வலிப்பு, எய்ட்சு, ஆஸ்துமா நோயாளிகளக்கும் கொடுத்துச் சோதனை செய்தாயிற்று, மனிதனுக்கு தினம் ஒரு அவுன்சு (20 மில்லி), கால்நடைகளுக்கு 100 – 150 மில்லி வரை கொடுத்து சோதித்து வெற்றி பெற்றாயிற்று.

நரம்பு மண்டல, மூளைசார்ந்த, மூளை பிசகிய பைத்தியத்திற்கே பசுவின் பொருட்கள் மருத்துவமான பிறகு, சாதாரண நோய்களைப் பற்றிய ஐயம் ஏற்பட வேண்டிய அவசியமே இல்லை.

**ஒரு வீடு : வீட்டிற்கொரு மாடு; வீட்டாருக்கு வந்துள்ள நோய்களைத் தீர்க்க மருத்துவ நிலையம் - மருந்து உற்பத்திச்சாலை - நாம் வளர்க்கும் பசு.**

உண்மையறியாமல் பசு என்னும் அருமைமிகு செல்வத்தை – நம் நாட்டுக் கால்நடைச் செல்வத்தை – கடந்த நாற்பது ஆண்டுகளில் இழந்து விட்டோமே! சே!

## 11. தீவிளை தாது

தாய்மை அடைந்த பெண் மக்களில் பலர் சாம்பல் சாப்பிடும் பழக்கம் கொண்டிருப்பார்கள். சில நோஞ்சான் குழந்தைகளும் சரி, கன்றுகளும் சரி, மண் சாப்பிடும் ஆவல் கொண்டிருக்கும். இதற்கு காரணம், நம் உணவில் போதிய தாது உப்புக்கள் இல்லாமை என்பது தான். அனைத்துவித தாதுக்களும் நமக்குத் தேவை என்றாலும், குறிப்பாக **பேரூட்டக் கனிமச்சத்து** என்று சொல்லக் கூடிய சோடியம், பொட்டாசியம், மக்னீசியம், கால்சியம், குளோரின், இரும்பு போன்ற தாதுக்களும், **நுண்ணூட்டக் கனிமச்சத்து** என்று சொல்லக் கூடிய தாமிரம், கோபால்ட், மங்கனீசு, துத்தநாகம், அயோடின், புளோரின் உட்பட அனைத்துத் தாது உப்புக்களும் அன்றாடம் நம் உணவில், சேர்க்கப்பட்டேயாக வேண்டும்.

ஒவ்வொரு தாதுவும் தத்தமக்கான உடல் நலம் பேணும் வேலையினைத் தொடர்ந்து செய்து கொண்டு வருவதால் தான். நோயின்றி வாழ்ந்து வருகிறோம். அனைத்து விளை பொருட்களிலும் நிரம்பி யிருப்பதால் தான், அது அதற்கான தனிதனிச் சுவையுடன் உணவாகக் கொண்டு வருகிறோம்.

பொதுவாக எந்தப் பொருள் எரிக்கப்பட்டாலும், எரிந்து முடிந்த சாம்பலில் இந்தத் தாதுக்கள் நிரம்பியுள்ளன. இந்த வித தாதுக்களின் கலவை நம் உடலுக்கு, கால்நடைகளின் உடலுக்குக் கொடுத்தே தீர வேண்டும். உலக உயிரினங்களே பயிர் வகைகளை தாவரப் பொருட்களை உண்டு தானே உயிர் வாழ்கின்றன. விளையும் பயிர்களில் இந்த தாதுப் பொருள்கள் நிரம்பியிருந்தால் தானே, அதனை உட்கொண்டு, மற்ற விலங்கின உயிர்கள் செரிமானித்து கிரகித்துக் கொள்ள முடியும்!

தாதுப் பொருள் கலவை தயாரிப்பது நாம் ஒன்றும் புதிதாகக் கண்டுபிடிக்க வேண்டிய அவசியம் இல்லை. 800 ஆண்டுகளுக்கு முன் பழனியில், இளம்பிள்ளை வாதம், பக்கவாதம், நரம்பு மண்டலக் கோளாறு, கால் கை வலிப்பு ( காக்காய் வலிப்பு ), குழந்தை பிறப்பைத் தொடர்ந்து ஏற்படும் ஜன்னி, நினைவாற்றல் மயங்கிய பிதற்றல் ( பேய் பிடித்தல்) போன்ற பயமுறுத்தும் நோய்களுக்கும், இன்னபிற நோய்களுக்கும் சித்த மருத்துவரால் தாதுக்கலவைப் பொடி தயாரிக்கப்பட்டு மருத்துவம் செய்து குணமாக்கப்பட்டது.



இந்தக் கலவைப் பொடியை உச்சி முதல் உள்ளங்கால் வரை நன்றாகப் பூசி, சூரிய உதய வெய்யலில் நீண்ட நேரம் உலவி வர விடப்பட்டார்கள். இந்த தாதுக் கலவையும் சூரிய ஒளியும் கதிர்வீச்சும் உடலுக்குத் தேவையான சத்தினைக் கொடுத்து உடலைத் தேற்றி நோயினை விரட்டியது.

இப்படிப்பட்ட தாதுக்கலவைத் தயாரிப்பின் முக்கியமான அங்கமே பசு (நாட்டுப் பசு) வின் சாணம் தான்.

1. கன்று ஈன்று, மீண்டும் பருவத்திற்கு வரும் நாளில், அதன் சாணத்தை சேகரித்து, விரட்டியாகத் தட்டி, வெய்யலில் உலர வைத்துக் கொள்ள வேண்டும். 2. அத்துடன் உயிர் மரத்திலேயே காய்ந்து பட்டுப்போன அரசங்குச்சி, மாங்குச்சி, ஆலங்குச்சி, அத்திக்குச்சி, சீந்தில் கொடி, நெல்லிக்குச்சிகளை (சுள்ளிகள்) சேகரித்து, நன்றாக உலர்த்தி வைத்துக் கொள்ள வேண்டும். 3. அன்னக்கூடைப்போல வாய் அகண்ட, மின் கதிர் எளிதில் பாயும் செப்புப் பாத்திரத்தை இதற்காகவே செய்து, தயார் படுத்திக் கொள்ள வேண்டும். 4. மலை உச்சி போன்ற உயரமான பாறையின் மேல் நிழல் இல்லாத இடத்தில் மேகமூட்டமில்லாத நாளில், காலைக்கதிர் நேராக தங்கு தடை இல்லாமல் விழக்கூடிய உச்சிப் பகுதியில் கிழக்கு நோக்கி அமர்ந்து கொண்டு சேகரித்த அனைத்துப் பொருட்களும் கையருகே வைத்துக் கொண்டு (யாகம் வளர்ப்பது போல) செப்பு பாத்திரத்தில் சிறிது சிறிதாக இட்டு புகையில்லாமல் எரிக்க வேண்டும். 5. எரிந்து முழுதும் தணிந்தவுடன் எவ்வித உலோகக் கரண்டியும் பயன்படுத்தாமல், புதியதாக ஒடித்து வரப்பட்ட பச்சை கருவேப்பிலை குச்சி, அல்லது புதிய ஆவாரங்குச்சியால் கிளறி விட்டு, ஆறவிட்டு, சளித்து எடுத்து புத்தம் புதிய மண் கலயத்துள் வைத்து துணியால் வேடு கட்டி வைத்துக் கொள்ள வேண்டும். இதுதான் விபூதியாக பரிமாணம் பெற்று விட்டது. இத்தாது கலவைப் பொடியினை **தீயில் விளைந்த தாது**வினை நெஞ்சுக்குழி, தொப்புக்குள் குழியில் பூசி வர வேண்டும். திடீர் நரம்பு மண்டல பாதிப்புக் காரர்களுக்கு உடல் முழுவதும் தடவி, காலை வெய்யில் அல்லது மாலை வெய்யிலில் உலவி வர வேண்டும். ஒரு சிட்டிகை எடுத்து வாயிலிட்டு உமிழ் நீரில் கரைத்தபடி உண்டு வர வேண்டும். இதனைத்தான் "**அக்கினி ஹோத்ரா**" என்று பெயர் மாற்றம் செய்து கொண்டார்கள்.

தீயில் எரிக்கப்பட வேண்டிய பொருட்களுடன் முனை ஒடியாத அரிசி மணிகளையும் சேர்த்து,

"சூர்யாய ஸ்வாக
சூர்யாய இதம் நமம;
ப்ரஜாபதேய ஸ்வாக;
ப்ரஜாப தயே இதம் நமம"

என்ற ஒலி அலை எழுப்பி எரித்தெடுத்துக் கொண்டார்கள்.

ஆக சாணத்தில் அடங்கியுள்ள மூலக்கூறுகள் எத்தனை சக்தி வாய்ந்தது, எத்தனை மருத்துவ குணம் கொண்டது, என்பதை நம் மூதாதையர்கள் கற்றுப் பயன்படுத்தியதை, இன்றைய அறிவியலார் தொட்டுக்கூட பார்க்க முடியவில்லை என்பதை எண்ணும் போது பெருமையாக இருக்கிறது.

**சக்தி பூமிக்குள் உறங்கிக் கொண்டிருக்கிறது**

**சக்தி தாவரங்களின் வழியாக விழித்தெழுந்து வெளிவருகிறது.**

**சக்தி கால் நடைகளின் மூலம் நடைபோடுகிறது.**

ஆக பூமிக்குள் உறங்கியிருக்கும் சக்தியினைப் புற உலகத்திற்கு மனித குலத்திற்குக் கிடைக்கச் செய்வதே கால்நடைகளின் மூலம் தான்.

இப்படிப்பட்ட கால்நடைகளை அழிக்க எண்ணியவர்களுக்குத் துணை போய் விட்டோமே என்பதற்காக நாம் கட்டாயமாக வருந்தித்தான் தீர வேண்டும்.



## 12. இழந்தவை ஏராளம்

கால்நடைகளை மட்டுமா இழந்து விட்டோம்? எண்ணிலடங்கா உண்மைகளை, பண்புகளை உட்பொருள் புரியாமல் இழந்து விட்டோம். அனுபவத்தில் முதிர்ந்த சான்றோர்களின் வாய்மொழியை உதாசீனப்படுத்தி விட்டோம். **'நாலெழுத்து படித்தவனெல்லாம் நாலும் அறிந்தவன்'** என்று நம்பி மோசம் போய்விட்டோம்.

பாட்டன் வடிவமைத்த கலப்பையில் மாற்றம் செய்து தாத்தா பயன்படுத்தினார். தாத்தா பயன்படுத்திய வேளாண் கருவியில் மாற்றம் செய்து தந்தை பயன்டுத்தினார். தந்தை சிற்சில நுட்பங்களைப் புகுத்தி நம்மிடம் கொடுத்திருக்கிறார். நாம் அறிவுலகத்தில் வாழ்வது உண்மையானால் தேவைப்பட்ட நுட்பங்களை மாற்றியமைத்து வடிவமைத்துக் கொள்ள வேண்டுமேயன்றி, ஒட்டு மொத்தமாக நம் முன்னோர்கள் பயன்படுத்தியது முற்றிலும் தவறானது என்று தூக்கி எறிந்துவிட்டு முன்னோர்களை ஏளனப்படுத்தக் கூடாது. அவர்கள் கண்டுபிடித்ததன் வளர்ச்சி தான் இன்றைய வளர்ச்சி. இதுவும் இறுதிநிலை என்று சொல்லிவிட முடியாது. அந்தக் காலத்தில் ஓடிய விமானமா இப்போது ஓடுகிறது? இல்லையே. இதற்காக முன்னோர்கள் அறிவாற்றலில் குறைந்தவர்கள் என்று மதிப்பிடுவது தவறல்லவா?

புஞ்சைக் கலப்பையை, நஞ்சைக் கலப்பையை அருங்காட்சியத்தில் பழைய உடைந்த தாழிகளுடன் பண்டம் பாத்திரங்களுடன் பார்க்க வேண்டிய பரிதாப நிலைக்கு "அறிவியல் போர்வை" நம்மைத் தள்ளிவிட்டது.

கிராமத்து அனுபவசாலிகளின் அறிவாற்றலை படித்த பட்டதாரிகள் கணக்கில் எடுத்துக் கொள்ளவே இல்லை. ஏட்டுப் படிப்பு, நாட்டு விஞ்ஞானிகளை முற்றிலுமாகக் கேவலப்படுத்தி விட்டது. உழவுத் தொழிலை ஆங்கிலத்தில் படித்துவிட்டால் அறிவியல் திறமை என்று நம்பி ஏற்றுக் கொண்டு விட்டோம். படிப்பு வேறு. அறிவு வேறு.

மண்புழுக்கள் மேலும் கீழுமாகத் துளையிட்டு, மண்ணைப் பொல பொலவாக்கி, காற்றோட்டம் உள்ளதாக்கி, உயிரோட்டமாக வைத்திருக்கிறது என்பதே அனுபவ உண்மை. இதை உணர முடியாதவர்கள், மண் புழுக்கள் உழவனின் எதிரிகள்; மண்ணைத் துளையிட்டு, நீரைப் பூமிக்குள் இறக்கி விடுகின்றன. பாய்ச்சப்படும் நீர் தினந்தோறும் பூமியால் குடிக்கப்பட்டு

விடுகிறது. இரசாயன உரம் இட்டு விட்டால் மண்புழுக்கள் இறந்து விடும். துளையிட வழியிருக்காது. நீர், நிலத்தில் நிற்கும் என்பதாக வெல்லாம் சொல்லிக் கொடுத்து இரசாயன உரத்தைப் புகுத்தினார்கள் பாவிகள்.

அனுபவத்தில் அறிவாற்றலில் முதிர்ந்த கிராமத்து மண் கற்றுக் கொடுத்த நுட்பங்களைக் கேட்டுக் கொள்ளவே மறுத்து விட்டோம். இதற்குச் சரியான எடுத்துக்காட்டு, உயிர் வேலிகளை எடுத்துவிட்டு, கம்பி வேலி போடுவது. உயிர் வேலி, காற்றலைகள் கொண்டு போகும் மண் துகள்களைத் தடுத்து நிறுத்துவது போல இரும்புக் கம்பிகள் மண் வளத்தைப் பாதுகாத்திடுமா?

கள்ளி, கற்றாழைகளின் நிறத்தை, நீரோட்டத்தைப் பார்த்து நிலத்தின் வறட்சியை, நீர்ப் பிடிப்புத் தன்மையை, விதைக்கும் பருவத்தை கணித்துச் சொன்னவர்களின் நுண்ணறிவைப் பயன் படுத்திக் கொள்ளவே இல்லை!

கற்றாழை, ஆடு தொடா செடிகளின் வேரடி மண்ணை எடுத்துப் பைத்தியம் தெளிவிக்கும் மருந்து செய்த முன்னோர்களின அறிவியல் நுட்பத்தைப் புரிந்து கொள்ளக் கூட நம்மால் முடியவில்லை. ஆனால் இக்கால இளசுகள், "பெரிசுகள்" எனக் கிண்டலடிப்பதை ரசித்து மகிழ்ந்தோம் தானே! **முதுமை என்பது மதிக்கப்பட வேண்டியது.** ஆனால்?

வீட்டிற்கு வேண்டாத சொறி பிடித்த கிழட்டு நாயை விரட்டியடிப்பது போல விரட்டி, அனாதை இல்லங்களில், முதியோர் இல்லங்களில் மறுவாழ்வு இல்லங்களில் தஞ்சம் புக வைத்தாயிற்று. ஓ! மனிதப் பண்பாடே! நீ எங்கே ஒளிந்து கொண்டு விட்டாய்? **இளமை பயன்படுத்திக் கொள்ள வேண்டிய ஒன்று.** ஆனால் ஒரு காலத்தில் இளமையைப் பயன்படுத்திக் கொள்ளாமல் தவறு செய்து விட்டோ மென்றால் தற்காலத்தில் முதுமையை மதிக்க மறந்து தவறு செய்து கொண்டிருக்கிறோம். இரண்டுமே பெருத்த இழப்பு தான். "குஞ்சுகள் மிதித்து முடமாகிப் போன கோழிகளின் சரணாலயம் தானே முதியோர் இல்லம்".

கைத்தொழில் செய்து வந்த குடும்பத்துப் பிள்ளைகள், மூத்தோர்களைப் பார்த்துப் பார்த்து தொழில் நுட்பங்களை, கலை வடிவத்தை மேம்படுத்திக் கொண்டு வாழ்ந்தார்கள். கைத்தொழில்கள் பரம்பரை பரம்பரையாகத் தொடர்ந்து வளர்ந்து வந்தன. அதாவத மூத்தவர்களின் செயல்பாட்டை கண் முன்னால் பார்ப்பதே கல்விக் கூடாராமக இருந்தது. கால ஓட்டம் எல்லாவற்றையும் மாற்றிப் புரட்டிப் போட்டுவிட்டது.



உண்மைகளின் உண்மைகள் புரியப்படவே இல்லை. நம் குடும்பத்தில் "கீழ்நோக்கு நாட்களில்" பிள்ளைகளின், பெயரன்களின் கைகளால் விதைத்துத் தொழிலைத் தொடங்கினார்கள். பரம்பரையாக வந்த குடும்ப வேளாண் தொழிலை, அடுத்து வரும் தலைமுறையினருக்கு மடை மாற்றித் தரும் செயல் இது. குடும்ப வாரிசுகளுக்கு வேளாண் தொழில் நுட்பத்தை இறக்கி, கற்றுக் கொடுக்கும் செயல் அல்லவா! விதை தெளிப்பு என்பதே ஒரு கலை, தொழில் நுட்பம் கற்றுக் கொள்ள வேண்டிய பாடம். பெயரன் தொடங்கினால் "கைராசி" என்பதாகத் திரிக்கப்பட்டு உண்மையை ஒளித்து வைத்தாயிற்றே!

விதைக்கத் தொடங்கும் போது சனி மூலை பார்த்து வணங்கி விட்டுத் தொடங்கினார்கள். காரணம், தமிழகத்தில் ஆடிப் பட்டத்தில் விளைந்து, பலன் கொடுப்பது இயற்கை நியதி. வடகிழக்குப் பருவக் காற்று தான் தமிழகத்திற்கு மழை கொடுப்பது. விதைப்பு விருத்தியாக வடகிழக்கு மழை வேண்டி வணங்கி விட்டுத் தொடங்கினார்கள். காலம், "சனிமூலை"யைப் பார்த்த பார்வை, சனி பகவானைப் பார்க்க வைத்து விட்டதே! உண்மை ஒளிக்கப்பட்டு, காலில்லாத கற்பனை, களம் இறங்கி விட்டதே!

தமிழர்களின் திருமணங்களில் "முகூர்த்தக்கால்" நிறுத்தி வலம் வந்து சடங்கு செய்வது மரபு. மணவிழா முடிந்தவுடன் முகூர்த்தகாலாக நிறுத்தி வைத்த "போத்தினை" ஆற்றங்கரை, குளக்கரை போன்ற நீர் நிலைக்குப் பக்கத்தில் பொது இடத்திற்கு உறவினர்களுடன் எடுத்துச் சென்று, மணமகன் குழி தோண்டி நட்டு வைக்க, மணமகள் நீர் வார்த்து விட்டு வருவது இன்றும் நடைபெற்று வரும் பழக்கம். இதன் உட்பொருள், எந்தக் குடும்ப விழா பொது நிகழ்ச்சியானாலும் "மரம்" நடுதல் என்பது தமிழர்களின் பண்பாடு; சமுதாயத் தொண்டு; உலக உயிர்களை வாழ வைப்பதற்கான ஒவ்வொருவரின் "பங்களிப்பு." **வீடு பெருகப் பெருக, காடும் பெருக வேண்டும்** என்பது நம் முன்னோர்கள் வகுத்த வாழ்வியல் நெறி.

மாபாதகர்கள் முளைக்க முடியாத மூங்கில் கழியில் வண்ணம் பூசி, திருமண மண்டபங்களில் நிரந்தரமாக வைத்து, நடைபெறும் அனைத்து திருமணங்களுக்கும் அதே குச்சியை வைத்து பொட்டிட்டு, பூ முடித்து, சடங்கு செய்வதோடு நிறுத்திக் கொண்டு சமுதாய சிந்தனையையே தேய விட்டு விட்டார்களே!

திருமண நிகழ்ச்சி போலவே, துயர நிகழ்ச்சியிலும் மரம் நடுதலையே கடமையாகக் கொண்டிருந்தார்கள். குழந்தைகள் இறந்து விட்டால் மரப்

போத்தில் தொட்டில் கட்டி, அதில் எடுத்து சென்று, இடுகாட்டில் புதைத்துவிட்டு, தலைமாட்டில் மரப்போத்தினை நட்டுவைத்து, நீர் வார்த்து விட்டுத் திரும்பினார்கள். வளர்ந்து வரும் மரம் இறந்தவர்களின் நினைவுச் சின்னமாகவும் இருக்கும். அதே நேரத்தில் சமுதாய நலன் காக்கும்படியான மரம் வளர்ப்பாகவும் அமையும் என்பது முன்னோர் வகுத்துக் கொடுத்த நெறி.

குழந்தைகள் மட்டுமா? யார் இறந்தாலும் மண்ணிலிருந்து உயிர்ப்பித்த மனிதனை மண்ணுக்கே திரும்பக் கொடுத்துவிட வேண்டும். அதனால் தான் "இயற்கை எய்தினார்" என்ற சொற்றொடரே ஏற்பட்டது. இயற்கையில் விளைந்த அனைத்தையுமே இயற்கைக்கே கொடுத்துவிட வேண்டும். இது தான் நோக்கம். இது தான் "**இயற்கையின் சுழற்சி**".

இட்டு மூடிய இடம் பொது; வளர்க்கப்பட காடும் பொது. சாதிக்கொரு இடுகாடு ஏற்படுத்திக் கொண்டு கூறு போட்ட பிறகு, "பொதுக்காடு" வளர்க்க முடியுமா? நட்டு வரும் போத்தெல்லாம் விறகுக்காகப் பிடுங்கப்பட்டு விட்டன. கொடுமை! கொடுமை!

காசநோய் போல தீராத நோயால் தாக்குண்டு இறந்தவர்களுடன், தாக்கிய கிருமிகளையும் அழித்துவிடும் தற்காப்பு கண்ணோட்டத்தில் அப்படிப்பட்ட உடல்களை மட்டும் எரித்தார்கள். மூப்படைந்து இறந்த உடல்களை தாழியில் வைத்து புதைத்தார்கள். அப்படிப்பட்ட பிண எரிப்புக்கு இடுகாட்டில் வளர்க்கப்பட்ட மரக்கிளைகளை யார் வேண்டுமானாலும் வெட்டிப் பயன்படுத்திக் கொள்ளலாம். இவ்வுரிமை ஆங்கிலேயன் போகும் வரை கூட இருந்தது. பிண எரிப்புக்கு ஆற்றோரப் பொது மரங்கள் வெட்டப்படுவதை எந்த அரசாங்கமும் தடுத்ததில்லை!

அதன் பிறகு, காடுகள் வேக வேகமாக அழிக்கப்பட்ட பிறகு தானே பொது இடுகாட்டு மரங்களே இல்லை எனும் நிலை; பணம் போட்டு விறகு வாங்கி எரிக்கும் நிலை; இடுகாடும் சுடுகாடாக மாற்றிய பிறகு மரம் நடுதலே அழிந்து போய் விட்டது. மரம் நட்டு வந்தது, மரம் வெட்டும் பழக்கத்திற்கு தாவியாயிற்று.

எப்படி இருப்பினும் தமிழர்கள் எந்தச் செயல் செய்தாலும் அதில் சமுதாயச் சிந்தனை இல்லாமல் இருக்கவே இருக்காது. தனிமனித நலம் என்பதற்கு இடமே இல்லாமல் பொதுப் பண்பாடு – கலாச்சாரம் – காக்கும் முகத்தான் நாகரிகத்தை வளர்த்தெடுத்திருப்பதை காணும் போது, தலை நிமிர்ந்து மகிழ்ச்சி கொண்டாட வேண்டியவர்கள் உலகத்திலேயே நாம் மட்டும் தான். நாம் தான் முழுத்தகுதியானவர்கள் என்பதில் எந்தத் தவறும் இல்லை.



இது போன்று, கால்நடை வளர்ப்பிலும் நற்பழக்கங்கள் நம்மை விட்டுப் பறந்து விட்டன. மாடு கட்டும் கயிறில் "முருக்காத்தி" முடிந்திருப்போம். மாடுகள் கட்டப்பட்ட இடத்தில் எத்தனை முறை சுற்றிச் சுற்றி வந்து கயிறு முறுக்கிக் கொண்டாலும், முறுக்கேறிய கயிறு இறுகி, மாட்டிற்கு எந்தத் தொந்தரவும் இடர்ப்பாடும் ஏற்படாமல் கட்டும் முறை நம் முன்னோர்களுடையது. கால்நடைகளைக் காப்பாற்ற மிக எளிதான சின்னஞ்சிறு சாதனம் தானே முறுக்காத்தி (முறுக்கு – ஆற்றி) தமிழர்களின் கண்டுபிடிப்பு பெருமையாகத்தான் இருக்கிறது.

ஈமக்கிரியை நேரத்தில் நவதானியம் தெளிப்பு இடுகாட்டில் செய்வதுண்டு. காடு மேடுகளில் பொது இடங்களில் மேய்ச்சல் தரையில் பலவித பயிர் வகைகளை தெளித்து, கால் நடைகளுக்கு உணவாகக் கிடைக்க ஏற்படுத்தப்பட்ட பழக்கம் இது. தெளிக்கப்படும் நவதானிய விதைகளும் நன்றாக வளர வேண்டி, பால் வார்த்தல் (பால் தெளிப்பு) வேறு. பால் சிற்றுயிரிகளை வளர்க்கும் மிகச் சிறந்த திரவ நிலை ஊட்டம். தெளிக்கப்பட்ட பால், மண்ணில் உள்ள சிற்றுயிரிகளை பெருக்கி, விதைக்கப்பட்ட நவ தானியங்களுக்கு வளர்ச்சி ஊக்கியாகப் பயன்பட்டு, பலதரப்பட்ட தீவனப் பயிர்களை விளைவித்து, கால் நடைகளுக்குத் தீவனமாகக் கிடைக்கச் செய்வதே இதன் நோக்கம்.

ஆக தமிழர்கள் தங்களின் குடும்ப இன்ப, துன்ப நிகழ்ச்சி எதுவானாலும் சில பழக்கங்களை வரையறுத்துக் குடும்ப விழாவை சமுதாயத்திற்கு பயன்படும் விழாவாகக் கொண்டாடி "பல்லுயிர் ஓம்பும்" பண்பாட்டில் தலை சிறந்து விளங்கியவர்கள் நம் முன்னோர்கள் என்பது பெருமைப் படக்கூடியதே!

ஆனால் பரிதாபம்! உண்மைகள் ஒளிந்து கொண்டு வெறும் சடங்கு மட்டுமே நிலைத்து நிற்கிறது. காரணம் புரியாமல் காரியம் மட்டுமே போலித் தனமாக நடைபெறுகிறது. நவதானிய விதைப்பு என்பது பொய்த்துப் போய் விட்டது. முளைக்க முடியாத விதத்தில் விதைப்பு நடைபெற்று வருகிறது. வேதனை தான் போ! உண்மைகளை எப்போது உணரப் போகிறோம்!

அந்நியக் கலப்பு எல்லாவற்றையும் மறக்கச் செய்து விட்டது. பண்பாட்டுப் படையெடுப்பு அடிப்படை நோக்கத்தை உண்மையை மறந்து, வெறும் கண் மூடிச் சடங்கை மட்டுமே நிலைநிறுத்தி விட்டது. நாம் **கண்மூடிப் போவதற்குள் உயிர்ப்பிக்கச்** செய்திட முடியுமா? ஆதங்கம் தான்!

## 13. சார்புணர்ந்து சார்பு கெட ஒழுகின்....

அளவிற்கரிய அந்நிய மயமாக்கத்தால் வெண்மைப் புரட்சி என்ற பெயரில் அந்நிய இனங்களை இறக்குமதி செய்ததே தவறு என்பதே பட்டறிந்ததிலிருந்து கற்றுக் கொண்ட பகுத்தறிவுப் பாடம்.

குளிர் நாட்டுப் பசுக்கள் சினைப் பிடித்தலில் குளறுபடி ஆகின்றன. கொம்பில்லா மாடுகள் சுண்ணாம்புச் சத்துக் குறைவால் கறவைக் காய்ச்சலால் துன்புறுகின்றன. குளம்புகள் படாத நிலங்கள் மலடாகி விட்டன. மாட்டு ஏர் உழாத நிலங்களில் சத்துக் குறைவான தானியங்களே விளைவிக்க முடிகிறது. சூரிய ஒளி மூலம் இயற்கையாக எந்தச் செலவும் இன்றி உற்பத்தி செய்து கொண்ட சத்துக்களை செயற்கையாகத் தீவனம் மூலம் கொடுக்க வேண்டி நேரிடுகிறது. இதற்காக அதிகச் செலவு; வீணான அதிக உழைப்பு; என்னதான் தீவன முறையால் சரிசெய்ய முயன்றாலும் இயற்கையை எதிர்த்து செயற்கை முறையால் முழு அளவு ஈடு செய்ய முடியவில்லை.

பால் உற்பத்தியை பாதிக்கும் அளவிற்கு மடிஅழற்சி நோய் தாக்கம். தசைமடி தான் இருக்குமே ஒழிய, பால் சுரப்பு மடி இல்லாமல் நோயாளியாகி விட்ட பரிதாப நிலை. ஆண்மைக்கு அழகு சேர்க்கும் உழைப்புத் திறன் இல்லாத காளைமாடுகள் உற்பத்தி. அதனால் காளை வர்க்கத்தையே தேவையின்மை கருதி அழித்தொழிக்கும் கொலை பாதகச் செயல். செலவுக்கு அஞ்சி மனிதக் குழந்தைகளையே (பெண் சிசுக் கொலை) நஞ்சூட்டிக் கொல்லும் பொருளாதாரத் தாழ்வு நிலை உள்ள நாட்டில், பயன் இல்லாத காளை மாடுகளையா விட்டு வைக்கப் போகிறார்கள்! கொலை! கொலை!! கொலை தான்!!! கால்நடைக் கொலை. அதிலும் பட்டினி போட்டு சித்தரவதைக் கொலை, அய்யோ! மனிதமே! நீ எங்கு இருக்கிறாய்?

அயல் நாட்டுப் பசுக்கள் இறக்குமதியால் இத்தனை பாதிப்புகளைக் கண்ட பின்னும், இன்று சிலர் வேறுவித அந்நியத் தேடலுக்கு முயற்சி செய்கிறார்கள்.

தமிழகத்தின் தட்ப வெப்பநிலைக்கு ஏற்றபடி வளர்ந்துள்ள நம் கால்நடைகளை நீக்கி விட்டு, அந்த இடத்தில் பாகிஸ்தான் பகுதியைச் சார்ந்த தார்பார்க்கர் பசுக்களை இறக்குமதி செய்து நிரப்பி விட ஆலோசனை கூறுகிறார்கள். இந்த வித ஆலோசனை கேட்டு சிலர் மிகச் சிரமப்பட்டு வட மாநிலங்கள் சென்று தார்பார்க்கர்களை வாங்கி வந்து வளர்க்கத் தொடங்கி விட்டார்கள்.



சென்னை வாசி ஒருவருக்குத் தவறான வழிகாட்டுதலால், இங்கிலாந்து, டென்மார்க், ஸ்விட்சர்லாந்து பறக்க வைத்து, தவறான இடத்திற்கு வந்து விட்டதாகத் திரும்பி வரச் செய்த பிறகு, மீண்டும் தவறாக வழி காட்டி ராஜஸ்தான், டெல்லி, குஜராத் அலைந்து விட்டுத் திரும்பச் செய்யும் மோசடி வழியைக் காட்டி விட்டு, கடைசியாக இங்கிருக்கும் கோவை மாவட்ட காங்கேயத்திற்கும் திண்டுக்கல் மாவட்ட மணப்பாறைக்கும் தஞ்சை மாவட்ட ஓம்பிலாச்சேரிக்கும் வழிகாட்டுவதை எந்த விதத்தில் நியாயப் படுத்த முடியும்?

இந்தியா என்ற ஒரு நாட்டிற்குள்ளாகவே ராஜஸ்தான் மாடு தமிழ்நாட்டிற்கு எப்படி அந்நியமாகி விடும் என்ற விவாதம் வேறு. விவாதிப்பவர்கள் ஒன்று, மாடு வளர்த்து பராமரித்து நட்டப்பட்டு, அனுபவமில்லா ஏட்டுச் சுரக்காய்க்காரர்கள் அல்லது ஏக இந்தியா கனவை கால்நடை வளர்ப்பில் புகுத்தும் "கற்பனாவாத சித்தாந்திகளாக" இருக்க வேண்டும்.

அந்நிய நாட்டுமாடு என்பதற்காக நாய் ஜெர்சியையும், பரீசியனையும் வேண்டாம் என்று கூறவில்லை. அப்படிப் பார்த்தால் பாகிஸ்தானும் அதன் தார்பார்க்கரும், சிந்தியும் இப்போது அந்நியம் தான். அந்நிய மண்ணுக்கேற்ற மரபுகளுடன் வளர்ந்தவை இவை.

நம் மண்ணுக்கேற்ற முறையில் வளர்ந்தவை நம் கால்நடைகள் மட்டுமே! இதுபோதும் என்பதே இதன் அடிப்படை.

பக்கத்துப் பக்கத்து நிலமே வெவ்வேறு மண்வாகு கொண்டிருக்க வில்லையா? சேலத்து மாம்பழத்திற்கு தனி ருசி எப்படி? அதே ருசி என் மற்ற மாவட்டங்களில் கிடைப்பதில்லை. பண்ருட்டி பலாவின் ருசி அடுத்த மாவட்டத்தில் கிடைப்பதில்லையே ஏன்? மதுரை மல்லிக்கு எத்தனை மவுசு?

தமிழ்நாட்டுக் காவிரிப் பகுதி ஓம்பிலாச்சேரி பசுவை, கங்கைப் பகுதி கேதாரிநாத், பத்ரிநாத்தில் உயிர் பிழைக்க வைக்க முடியுமா? இங்குள்ள காங்கேயத்தை இராஜஸ்தான் பாலைவனத்தல் காப்பாற்றிட முடியுமா? அத்துணை ஏன்? சிவப்பு சிந்தி, வெள்ளை சிந்தி, இமாச்சல், அருணாச்சல பிரதேசத்தில் வளர்ந்திட முடிகிறதா? இத்திட்டங்களெல்லாம் குளிர் அறைக்குள் உட்கார்ந்து கொண்டு கயிறு திரிக்கும் கற்வனாவாதம்!

புஞ்சைப் பகுதி மண்வெட்டி நன்றாகக் குனிந்து வெட்டும் அமைப்பில் இருக்கும். நஞ்சைப் பகுதி மண்வெட்டி நின்று கொண்டு வெட்டும் பாங்கில்

அமைக்கப்பட்டிருக்கும். சேற்றில் முழங்கால் வரை பதிய நின்று கொண்டு வேலை செய்ய வேண்டுமே அதற்காக! ஒரே வித தளவாடம் ஒரே நெல், ஒரே மாடு, ஒரே வித உணவு, இது சரிதானா? நாம் காட்டும் வழி சரிதானா?

தமிழ்நாடு கடல் சூழ்ந்த பகுதி. பெய்த மழையெல்லாம் நிலத்தின் வண்டலை அடித்துக் கொண்டு ஓடி கடலில் கரைத்து விட்ட வெற்று மண். உயிருள்ள மண்தானேயன்றி சத்தில்லா மண். பேரூட்டம், நுண்ணூட்டம் கரைத்துப் பிழிந்து எடுக்கப்பட்டு விட்ட சக்கை மண். இங்கே வளரும் பயிர்கள் ஊட்டச்சத்து குறைவாக இருக்கக் கூடியது தான்.

கால்சியம் சத்துதான் எலும்பு உறுதிக்கும், உடல் இயக்கத்திற்கும் அடிப்படைத் தேவையான கனிமம், கால்சியம் வேண்டுமானால் பாஸ்பரஸ் வேண்டும். இரண்டும் இருந்தால் ஒன்றுபடுத்த வைட்டமின் 'டி' வேண்டும். வைட்டமின் 'டி' யை கிரகிக்க சூரிய ஒளி வேண்டும். அதற்காக உடலில் கருப்பு நிறம் வேண்டும்.

அப்படியானால் கருமை கலந்த தோல், முடி, கொம்பு அமைந்த உடல்வாகு அமையப் பெற்றிருக்க வேண்டும். இங்கே சூரிய ஒளி கிரகிக்கப் படுவதாலும், தட்ப வெப்ப நிலை சீராக இருப்பதாலும் உடலின் வெப்பத்தை தணிக்க வேண்டி தனி உடலமைப்புத் தேவைப்படாமல் போய்விட்டது. ஆகவே உடல் ஒட்டிய கெட்டியான தோல் அமைப்பு கொண்டமைந்து விட்டது நம் கால்நடைகள்.

அதே நேரத்தில் ராஜஸ்தான் பகுதி மாடுகள் சூரியச் சூட்டை வெளியேற்றும் அவசிய நிலையுள்ளதாலும், பரப்பளவு அதிகம் கொண்டவையாக தொளதொளத்த தோல் அமைப்பு கொண்டவையாகத் தார்பார்க்கர் முழு வெள்ளை நிறத்தில் அமைந்திருக்கின்றன மண்ணுக்கேற்ற மரபோடு.

ஆக தார்பார்க்கர் அந்த தட்ப வெப்ப நிலைக்கு சரியே! தமிழ்நாட்டில் சூரிய வெப்பத்தை வெளியேற்றும் பரந்துப்பட்ட தோல் அமைப்பு தேவையில்லையே! தமிழ் நாட்டின் தட்பவெப்ப நிலையைப் பார்க்கும் போது தார்பார்க்கரும் அந்நியமே!

தமிழ்நாட்டுச் சோழ மண்டலப் பகுதியில் ஒவ்வொரு ஊருக்கும் ஐந்தாறு வாய்க்கால்கள் உண்டு. பாலம் கட்டப்பட்டதெல்லாம் இப்போது தானே! இத்தனை வாய்க்கால்களில் வண்டி இழுத்து, ஏறி கடந்து சுறுசுறுப்பாக இழுத்துச் செல்லக்கூடிய திறனுள்ள காலைகள் தேவைப் பட்டன. அப்படியே வளர்த்தெடுத்துக் கொண்டார்கள்.



ஆனால் தார்பார்க்கர், இழுதிறன் இருந்தாலும் சுறுசுறுப்பு குறைந்த சோர்வுடைய இனம். அதனால் தான் தார்ப்பார்க்கரை தமிழ்நாட்டில் வளர்த்த போது மக்களால் வரவேற்கப்படவில்லை.

பயிர் வகைகளில் கலப்போ, முளைப்புத் திறனோ, எது பாதிக்கப்பட்டாலும் அடுத்த மூன்று மாதத்தில் தெரிந்து விடும். அதனால் பல தரப்பட்ட கலப்பினங்களை வேளாண் துறையினர் சோதித்துக் கொள்ள முடியும். கால்நடையில் அப்படியல்ல. அதன் சந்ததி விருத்தி அல்லது வேறு எந்தக் குறைபாடும் வெளியில் தெரிய குறைந்தது 4 தலைமுறைகள் அல்லது 20 ஆண்டுகள் கழிய வேண்டும்.

ஏற்கனவே, தமிழ்நாட்டுப் பண்ணையில் தார்பார்க்கர் வளர்த்து, சோதனை செய்யப்பட்ட பிறகு தான் தார்பார்க்கர் வளர்ப்பு கைவிடப்பட்டது என்பதை கவனத்தில் கொள்ள வேண்டும். அதாவது ஏற்கனவே செய்யப்பட்ட ஆராய்ச்சிகளின் முடிவு சாதகமாக இல்லை என்பதை மட்டுமே கருத்திற் கொண்டால் போதும்.

**புருசெல்லோசிஸ்** என்ற நோய் பசுக்களில் கருச்சிதைவு ஏற்படுத்தக் கூடியது. இந்நோய் தாக்கப்பட்ட பசுக்களின் பால் அருந்துவதின் மூலம் மனிதர்களுக்குப் பரவக்கூடியது. ஒரு நேரம் காய்ச்சலும் அடுத்த நேரம் சாதாரண தேக சூட்டுடனும் விட்டு விட்டு காய்ச்சல் தாக்கி வாதை புரியக் கூடியது. இந்நோயினால் தாக்குண்டு சில கால்நடைகள் இறந்துள்ளதோடு, சில மருத்துவர்கள் கூட இறந்திருக்கிறார்கள்.

இந்த நோயின் பயங்கரத்தைக் கருத்திற் கொண்டு தாக்குண்ட பசுக்களைப் பண்ணைகளில் அரசாங்கமே கொன்றழித்து இருக்கிறது என்பது நம் நாட்டு வரலாறு, அப்படியும் இந்நோய் கட்டுப்படுத்த முடியாமல் தொடர்ந்து பரவிக் கொண்டுதான் இருக்கிறது.

இந்த நோய் நம் நாட்டுப் பசுக்களில் ஏற்படுவதை விட சிந்தி, தார்பார்க்கர் சாகிவால், ஜெர்சி, பிரிசியன் போன்ற தமிழ் நாட்டிற்கு அந்நியமான பசுக்களின் பாலின் மூலமே அதிகம் பரவுகிறது. அதாவது நம்நாட்டுப் பசு இந்நோய்க்கான எதிர்ப்புத் தன்மை இயற்கையாகவே அதிகம் கொண்டிருக்கிறது என்று பொருள்.

இந்தச் சோதனையும், வேதனையும் நமக்குத் தேவை தானா என்பதை ஆழ்ந்து சிந்தித்து முடிவு செய்ய வேண்டிய ஒன்று என்று எச்சரிக்கை செய்வது நம் முன்னுள்ள மிகப் பெரிய கடமை.

இந்த நிலையில் தார்ப்பார்க்கள் வளர்க்க ஆலோசனை கூறுவது மீண்டும் நம் விவசாயிகளுக்கு ஒரு அக்னிப் பரீட்சை, போதும்! அவர்கள் பட்டது போதும்!! வாழ விடுவோம்!!

வள்ளுவன் பாடினான்

"சார்புணர்ந்து சார்புகெட ஒழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய்". (குறள் 359)

எந்தப் பொருளாக இருந்தாலும் அது சார்ந்துள்ள இயற்கை நிலையினை உணர்ந்து வாழவிடல் வேண்டும். அந்நிலைக்கு மாறுபட்டு வேறு வடிவத்தில் சார்ந்து வாழத் தலைப்பட்டால், எல்லாமே நிலைத்து நிற்காமல் அழிந்து விடும்.

**அந்நிய நாட்டு வெண்மைப் புரட்சி போலவே உள்நாட்டு வெண்மைப் புரட்சியும் நமக்கு வேண்டாதது,** ஒத்துவர முடியாதது என்று நம்பி களமிறங்குவோம்.

தவிர்ப்பனவற்றைத் தவிர்த்து தான் தீர வேண்டும்.



# 14. மீட்டெடுக்க முடியுமா?

சாணமும், பால், தயிர், மோர் உட்பட எல்லாமே இத்தனை மருத்துவக் குணங்கள் நிரம்பியிருப்பதின் அடிப்படை ஒன்று உண்டு.

மாட்டின் வயிற்றில் கோடிக்கணக்கான சிற்றுயிரிகள் மண்டிக் கிடக்கின்றன. இவைகள் ஓடி உயிர்த்து, உயிர்ப்பித்து, மடிந்து மடியச் செய்து செரித்து, செரிக்கச் செய்து, இரண்டிரண்டாக உடைந்து, இணைந்து, வெவ்வேறு உயிர்களாகி, உலக உயிர்களின் தோற்றத்தைத் தொடங்கி வைத்து, உலகின் முன்னோடி ஜீவன்களாக பரிணமித்தவைகள். நம்முடைய மூத்த பரம்பரையினர். இதிலிருந்து தான் பலகோடி பரிணாம வளர்ச்சி பெற்ற மனிதனாகக் கடைசி எல்லைக்கு வந்திருக்கிறோம். இந்த உயிரிகள் தான் சாணம் மூலம் மண்ணில் பட்டு, மண்ணுக்கேற்ற பலகோடி உயிரிகளாக உயிர்ப்பிக்கின்றன. மண்ணில் உயிர்த்த பல கோடி சிற்றுயிரிகள் காலப் போக்கில் பல்வேறு கிருமிகளாக பூச்சி பொட்டுகளாக, மண்ணில் புழுக்களாக மண்புழுக்களாக பூமியை நிலத்தை உலகத்தை உயிர் மண்டலமாக மாற்றி வைத்துள்ளன.

இந்த உயிரிகள் தான் பஞ்சகவ்வியா, இயற்கை உரம், போன்றவற்றின் அடிப்படை ஆதாரப் பொருள், இந்த ஆதாரப் பொருளை சங்கிலித் தொடராக உற்பத்தி செய்து, உலகத்திற்கு உயிர் கொடுத்து கொண்டிருப்பதும் நம் கால்நடைகள் தான் என்று கூறுவது மிகைப்படுத்தப்பட்ட சொல்லாடல் அல்ல.

இந்த தத்துவத்தை உணராமல், கால்நடைகளை ஒதுக்கி, கால்நடைகளை வளர்ப்போரை கீழ்த்தட்டு மக்களாகக் கொச்சைப் படுத்தி, கேவலப்படுத்தி, அவமானப்படுத்தி, உண்டி கொடுத்து, உயிர் கொடுப்போரை உதாசீனப்படுத்தி, கால்நடை வளர்ப்பையே கைவிட்டு ஓடும் அவல நிலைக்குத் தள்ளி விட்டதற்கு யார் பொறுப்பு?

விவசாயத்திற்கு மட்டுமே கால்நடைகளை வளர்க்கவில்லை நம் மூதாதையர்கள். அதன் மூலம் பெறப்படும் மருத்துவப் பயன்களுக் காகவாகிலும் இன்றைய மனிதன் கால்நடைகளை வளர்க்கக் கூடாதா என்று பரிதாபமாகக் கேட்கத் தோன்றுகிறது.

கால்நடைகளை ஒவ்வொரு வீட்டுப் பட்டி தொட்டிகளிலிருந்து அதன் பக்கத்திலிருந்து ஏர் கலப்பைகளுடன் அப்புறப் படுத்திவிட்டு, அந்த இடத்தில் டிராக்டரை நிறுத்தி அழகு பார்க்கச் செய்த, "வெண்மைப் புரட்சி"யையும், பசுமைப் புரட்சியையும் எத்தனை முறை நையப் புடைத்தாலும், சுடு சொற்களால் சுட்டெரித்தாலும் தகும் தானே!

**“போனதற்கு வருந்துதல் வேண்டா புன்மை தீர்க்க முயலுவம் வாரீர்”** என்றான் பாரதிதாசன்.

நம் கால்நடைச் செல்வங்களை மீட்டெடுக்க வேண்டிய கட்டாய நிலைக்குள் தள்ளப்பட்டு விட்டோம்!

எப்படி?

**வீட்டுக்கொரு நாட்டுப் பசு வளர்ப்போம்;** பிழைப்புத் தொழிலை நாடிச் சென்றவர்கள், பசி பட்டினி பஞ்சம் இல்லாமல் வாழ்ந்து பழக்கப்பட்டு விட்ட பிறகு, “வறுமை கோல உற்பத்தித்” தொழிலுக்குத் திரும்ப முடியுமா?

நம் விவசாயிகள் பண்டமாற்று முறையிலேயே வாழ்ந்து வந்த பரம்பரையினர். கூட்டுறவாக சமுதாயச் சிக்கல் இல்லாமல் வாழ்ந்து வந்த சான்றோர்கள்.

ஒருவர் நிலத்தில் நெல்; அடுத்தவர் நிலத்தில் வரகு; சோளம் கம்பு; பரிமாறிக் கொள்வார்கள்.

ஒருவரிடம் துவரை; அடுத்தவரிடம் பயிறு, உளுந்து. பரிமாறிக் கொள்வார்கள்.

ஒருவரிடம் மிளகாய், கேழ்வரகு, மல்லி; அடுத்தவரிடம் வெண்டை, கொத்தமல்லி, கத்தரி; பரிமாறிக் கொள்வார்கள்.

ஒரு காலத்தில் பால் கூட பண்ட மாற்று முறையில் கொடுக்கல் வாங்கலில் இருந்தது. பால் கொடுத்து விட்டு விளக்கு எரிப்பதற்கான எண்ணெய் பெற்றுக் கொண்டார்கள்.

உழைப்பைக் கூட பரிமாறிக் கொண்டார்கள். தெருவார்கள் சேர்ந்து இன்று ஒருவர் நிலத்தில் வேலை; நாளை அடுத்தவர் நிலத்தில் வேலை; அடுத்தடுத்த நாள் அடுத்தடுத்தவர் நிலங்களில் வேலை; இப்படியாக உறவாக வாழ்ந்த அறவாழிகள் நம் முன்னோர்கள்.

பணவருவாய் என்பதாகவும் ஒன்றுமில்லை; பணச்செலவு என்பதாகவும் விவசாயிக்குப் பெரிதாக ஒன்றுமில்லை. பணத்தைப் போல விதைகளை, விளை பொருட்களை சேமித்து வைத்துக் கொள்ளவும் முடியாது. சேமிப்பு, லாபம் ஈட்டுதல் என்கிற பொருளாதார நோக்கமும் இல்லாமல் வாழ்ந்த “விவசாயப் பண்பாட்டை” எவ்வளவு போற்றினாலும் தகும்.

வீட்டு விதை எடுத்து அவர்களே நாற்றுவிட்டு, நடவு நட்டு, களை எடுத்து, பாதுகாத்து, செலவில்லாத விவசாயம் செய்து வந்தார்கள். விவசாயத்திற்கு தேவையான தொழு உரம் அவர்களுடையது. வாழ்க்கை



கட்டுப்படியானதாக, அல்லலற்றதாக அமைதியாகத் தெம்மாங்குப் பாட்டோடு கழிந்தது.

இப்போது கோடை உழவு, சேர் உழவு, தாளடிக்கு, டிராக்டர் செலவு, விதை வாங்கப் பணச் செலவு. செலவில்லாத விவசாயமே அறவே இல்லை எனும் இழிந்த நிலை.

விளைந்த விளைச்சலை விரும்பிய விலைக்கு விற்க முடியாமல் மிகப் பெரிய கட்டுப்பாடு! கட்டாயப் படுத்துதல்; விவசாயிகள் இடுப்பொடிந்து கடைசி மூச்சை விட்டுக் கொண்டிருக்கிறார்கள். சிலர் தற்கொலை வரை சென்று விடுகிறார்கள்.

வாழ்வியலையே பணவியலாக மாற்றியது யார் குற்றம்? விவசாயத் தொழிலை விட்ட விவசாயிகள் துணைத் தொழில் அல்லது மாற்றுத் தொழிலில் ஈடுபட ஏற்கனவே ஓரளவு அனுபவம் உள்ள கால்நடை வளர்ப்புத் தொழிலைத் தேர்ந்தெடுத்து வாழத் தலைப்படும் போதும், விவசாயத் தொழிலில் வீசிய அதே நச்சுப்புயல், நட்டம்! நட்டம் !! நட்டம் !!! மூச்சுத் திணறல்; இறுதியாக மூச்சு விடுதல்.

இனி வீட்டிற்கு வீடு பசுவளர்ப்பவர்களுக்கு மட்டுமே அரசாங்கச் சலுகைகள், உணவுப் பொருள் பெறுவதில், முன்னுரிமை என்பதானதொரு நிலைமை ஏற்படட்டும். நாடு மீண்டும் கால்நடை வளர்க்கத் தொடங்கி விடும். உற்பத்தி என்பது மக்களைக் காக்கும் சமுதாயப்பணி. உற்பத்தி தொழிலில் ஈடுபடுவர்கள் அரசாங்கத்தின் “செல்லப் பிள்ளைகள்” ஆனால் இன்று “சவலைப் பிள்ளைகளாக” இலவசங்களுக்கு ஏங்குபவராக வைத்திருப்பது கொடுமை.

தற்போது வங்கிகள் “கௌரவ அட்டைகள்” கொடுத்துள்ளது போல, உற்பத்தியாளர்களுக்கு ‘சலுகை அட்டைகள்’ கொடுத்து இவர்கள் எந்தப் பொருள் வாங்கினாலும் அப்பொருளுக்கான அரசாங்க வரி வசூலிக்க கூடாது என்கிற ஏற்பாட்டில் மதிப்பளிக்க வேண்டும். ஆனால் கௌரவப் படுத்தப்பட வேண்டியவர்கள் கேவலப்படுத்தப் படுகிறார்கள். நேர் எதிர்மாறான தலைகீழ் நிலை. மாற்றப்பட்டே தீர வேண்டும். ஆனால் அதற்கான அறிகுறி இன்னும் எங்குமே உதிக்கவில்லை என்பது எதார்த்தனமாக உண்மை.

நோயற்ற வாழ்க்கைக்கு கால்நடை வளர்ப்பு, அப்படியே நோய் வந்தாலும் சிகிச்சைக்குக் கால்நடைப் பொருட்களிலிருந்து தயாரிக்கப்படும்

மருத்துவ சிகிச்சை, இவை அனைத்தையும் இழந்து விட்டது மிகப் பெரிய கேடல்லவா! எல்லாமே வெண்மைப் புரட்சி மீது கொண்ட வினோத ஆசை.

பசுமைப் புரட்சியால் பாழ்பட்டுப்போன நிலவளத்தை, பாரம்பரிய இயற்கை விவசாய முறைகளை, அழிக்கப்பட்ட விதைச் செல்வங்களை மீட்டெடுக்கும் முயற்சியில் முதல் அடி எடுத்து வைத்து விட்டார்கள் வேளாண் துறையினரும் விழிப்புணர்வு பெற்ற விவசாயப் பெருங்குடி மக்களும்.

ஆனால், வெண்மைப் புரட்சியால் பாதிப்படைந்ததை இன்னும் மக்களும் புரிந்து கொள்ளவில்லை. கால்நடை வளர்ப்புத் துறையும் ஆலோசிக்கவில்லை.

நோயற்ற வாழ்க்கை வாழ விரும்பும் இயற்கை வாழ்வியல் ஆர்வலர்கள், சாதாரண நுகர்வோருக்கான உரிமையின் அடிப்படையில் இந்த ஐய வினாவைத் தொடுக்கிறார்கள்.

**“அயல் இனப் பசுக்கள் நம் நாட்டிற்குத் தேவை தானா”?**

அன்றறிவாம் என்னாது அறஞ்செய்க மற்றது
பொன்றுங்கோல் பொன்றாத் துணை (குறள் 36)

பிற்காலத்தில் பார்த்துக் கொள்ளலாம் என்று எண்ணாமல் இளைஞர்கள் இன்றே செயலில் இறங்கிட வேண்டும். அதுவே நாம் அழிந்தாலும் உலகம் உள்ளளவும் அழியாமல் துணை நிற்க முடியும்.

“இருக்கும் நிலை மாற்ற ஒரு புரட்சி மனப்பான்மை
ஏற்படுத்தல் பிறர்க்குழைக்கும் எழுத்தாளர் கடமை”.

பாரதி தாசன்

கால்நடைகளைப் காப்போம்
மனித வர்க்கத்தைக் காத்துக் கொள்வோம்.



# அந்தக் காலமும் இந்தக் காலமும்

ஊருக்கு ஊரு காடுவளர்த்தது அந்தக்காலம்
– அது அந்தக் காலம்

தோப்புத்துரவு வெட்டியழிப்பது இந்தக்காலம்
– இது இந்தக் காலம்

வீட்டுக்கு வீடு ஆடு வளர்த்தது அந்தக்காலம்
– அது அந்தக் காலம்

கூட்டம் போட்டுத் தின்னு தீர்ப்பது இந்தக்காலம்
– இது இந்தக் காலம்

குளங்கள் வெட்டிக் கிணறு தோண்டியது அந்தக்காலம்
– அது அந்தக் காலம்

குடிநீர் போத்தல தூக்கித் திரிவது இந்தக்காலம்
– இது இந்தக் காலம்

ஊருக்கு நாலு காளை திரிஞ்சது அந்தக்காலம்
– அது அந்தக் காலம்

காளை இனமே காயடித் தழிஞ்சது இந்தக்காலம்
– இது இந்தக் காலம்

வைக்கோல் அடிச்சு மாட்டுக்குப் போட்டது அந்தக்காலம்
– அது அந்தக் காலம்

மாட்டை அடிச்சு வாய்க்குள் போட்டது இந்தக்காலம்
– இது இந்தக் காலம்

மூட்டை விலைக்கு கோட்டை விற்றது அந்தக்காலம்
– அது அந்தக் காலம்

வீட்டைக் கட்ட நாட்டை விற்பது இந்தக்காலம்
– இது இந்தக் காலம்

கல்யாணம் செஞ்சு பிள்ளை பொறந்தது அந்தக்காலம்
– அது அந்தக் காலம்

குளோனிங் முறையில் குட்டி பெறுவது இந்தக்காலம்
– இது இந்தக் காலம்

காளைக் கன்றுக்குப் பசுக்கள் வளர்த்தது அந்தக்காலம்
– அது அந்தக் காலம்

பாலைக் குடிச்சுப் பாழாய்ப் போவது இந்தக்காலம்
– இது இந்தக் காலம்

உழைப்பை உயர்வாய் தொழுது மதித்தது அந்தக்காலம்
– அது அந்தக் காலம்

குரங்கை, கல்லை கும்பிட்டழுவது இந்தக்காலம்
– இது இந்தக் காலம்

# பெற்ற பரிசுகளும் பாராட்டுக்களும்

1. திருநெல்வேலி மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகம் நடத்திய "தமிழ்நாட்டுக் கிராமக் குடிசைகளை மாற்றும் வழிமுறைகளும் கிராமத்தப் புதிய வீடுகளும்" என்கிற நூல் வடிவக் கட்டுரைப் போட்டியில் ரூ. 5000 பரிசும் பாராட்டும் பெற்றது.
2. இலண்டன் சுடரொளி வெளியீட்டுக்கழகம் "புதுயுகத் தமிழர்" என்னும் கருப்பொருளில் நடத்திய கவிதைப் போட்டியில் ரூ. 1500 பரிசும் பாராட்டும் பெற்று, சுடரொளிக் கவிஞர் என்கிற பாராட்டுப் பெயருக்கான அடித்தளமாக அமையப்பெற்றது.
3. 'புதுச்சேரி மூவொரு கல்வி அறக்கட்டளை' சார்பில் நடத்தப்பெற்ற இலக்கிய விருதுப் போட்டியில் "காலை முதல் மாலை வரை" என்னும் நூலுக்கு ரூ. 2500 பரிசும் பாராட்டும் பெற்றது.
4. 'சென்னை பெரியார் காமராசர் பேரவை 'நடத்திய மனித நேய இலக்கியப் பரிசுப் போட்டியில் காலை முதல் மாலை வரை நூலுக்காக பாராட்டி "மனித நேய முரசு" என்னும் பாராட்டுப் பட்டம் பெற்றது.
5. தஞ்சாவூர் தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் சித்த மருத்துவத் துறை நடத்திய "பாரம்பரிய மருத்துவ மாநாட்டில்", "நாட்டுப்புற மருத்துவக் கள ஆய்வுகள் - மருத்துவப் பழமொழிகள்" என்னும் ஆராய்ச்சிக் கட்டுரையைப் பாராட்டிச் சான்று பெற்றது.
6. கன்னியாகுமரி திருவள்ளுவர் அறக்கட்டளை நடத்திய திருக்குறள் திருவிழாவில் பங்கேற்றமைக்காக "திருக்குறள் தொண்டர்" என்கிற சிறப்புப் பட்டம் பெற்றது.
7. காவிரி மனித வள மேம்பாட்டு மையம் மற்றும் ஆராய்ச்சி நிலையம், சிறந்த விவசாய, சமூகத் தொண்டினை பாராட்டிச் சான்றிதழ் அளித்து கௌரவித்தது.
8. திருப்பூர் நடவு சமூக மையம் நடத்திய "பெண்ணே நீ - 2008" என்கிற கவிதைப் போட்டியில் முதல் பரிசும், பாராட்டும் பெற்றது.
9. 'திருவையாறு ஔவை அறக்கட்டளையின் தமிழய்யா கல்விக் கழகம்' நடத்திய கட்டுரைப் போட்டியில் பரிசு பெற்றமைக்காக "செந்தமிழ்ச்சுடர்" என்னும் பட்டம் அளித்து பாராட்டியமை.
10. சென்னை மகா கவி பாரதி நற்பணி மன்றத்தினரால், "மறந்து போன மருத்துவம்" நூலுக்காக, மருத்துவச் சேவையைப் பாராட்டி "மனித நேய மாமணி" என்கிற சிறப்புப்பட்டம் அளித்துப் பாராட்டியமை.